191

# THE SOUTH - AFRICAN QUESTION.

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOURWAGN TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜேயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 21.] 1913ஹு நவம்பர்-டிஸம்பர்மீ, பிரமாதீசஹு கார்த்திகை-மார்கழி [சஞ்சிகை. 8-9.

## M. K. GANDHI: A CHARACTER SKETCH.

*Mr. S. K. Ratcliffe, in the Manchester Gardian, writes:—*

"Five years ago, when the ripening Union of South Africa was under discussion, you might have met at many gatherings in London a quiet-mannered Indian, a man of forty, small and slight; unobtrusive, but always ready to talk; deeply in earnest (you could see with half a glance), but conspicuously reasonable, patient, persuasive; never ruffled or combative, always kindly, sweet-tempered—and, as you would guess, tenacious almost beyond anybody you have ever known. This was Mohandas Karamchand Gandhi, Barrister-at-Law, Attorney of the Supreme Court in the Transvaal, and leader of the South African Indians in their struggle for civil rights; organiser of passive resistance.

A man you cannot-checkmate or get round, though you can, of course, put him for a time out of the way . . . . He is an expert in scientific agitation. Never was there a popular leader more uncompromisingly hostile to militancy. There is no tolerance in him for any thing even remotely resembling violence. Passive resistance or, as he prefers to call it, soul-force is his single weapon, and he never sanctions its use until every conceivable means of negotiation and persuasion has failed. . . . The South African Indians give him an unlimited allegiance. His character commands their reverence; they obey him like children; they believe in his wisdom. With Mr. Gandhi on the field, the struggle proceeds without bloodshed. Remove him, and the furies are abroad. . . . He has shown astonishing gifts of leadership and diplomacy, and an equally astonishing grasp of affairs and knowledge of men. But, fundamentally, M. K. Gandhi is a recluse, a devotee, a mystic. His speculative standpoint is unreservedly Tolstoyan. He is an alien in the modern world, an enemy of what we call Western civilisation. . . . Our Modern world is the Inferno and the only right thing for man to do is to get out of it into silence, solitude, poverty, and peace. And yet with it, here is Mohandas Karamchand Gandhi, the spiritual Nihilist, sacrificing himself wholly in order to secure for his compatriots a little measure of civil rights in a dominion which will never willingly accept them as free citizens. You must admit that it is strange."

விவேக  சிந்தாமணி.

*'Far or forgot to me is near ;*
*Shadow and sunlight are the same ;*
*The vanished Gods to me appear ;*
*And one to me are shame and fame."*

"இஷ்ட விரோதவைராக்கிய முஷ்டி"

சாதனு தீரரான

## மோஹனதாஸ் கரம்சந்த்ர காந்தி.

திருவருள் வணக்கம்.

"கொட்டுக் குந்தாலி யிரண்டே; இரண்டிற்கும்
கொட்டுக் குந்தாலிக்கும் பாரை வலிதென்பா;
கொட்டுக் குந்தாலிக்கும் பாரைக்கும், மூன்றிற்கு
மிட்டம் வலிதென்பர், ஈசன் அருளே."—திருமந்திரம்.

ஆத்ம சக்தி மூன்றில் இச்சாசக்தியே முதன்மையானது. இஷ்டத்தில் உதித்ததையே புத்தி அறிகிறது. புத்தியறிந்ததையே மனம் செய்கிறது. இந்த மூன்று சக்தியையும் ஞானஸ்வரூபியாகிய "பொல்லாப்பிள்ளையார்" உடையராதலால் அவரை சக்திமான் என்றும், இம்மூன்றையும் சக்திகள் என்றும் சொல்லுவர். இச்சாசக்தியை வல்லபை யென்றும், ஞானசக்தியை புத்தி யென்றும் கிரியா சக்தியை சித்தி யென்றும் சொல்லுவர். அவரையன்றி வேறு சக்திமானுமில்லை. இவைகளை யன்றி வேறு சக்தியுமில்லை. எனவே, பொளியாத பிள்ளையார் ஸ்வயம் பிரகாசத்திலிருந்து உதித்தவராதலால் அவர் ஸ்வயஞ்சோதிமயமாகவே யிருக்கிறார்; அவரது நித்தியானந்த உருவத்தைக் கூட்டிக் குறைக்க முடியாது. ஆதலால் கல்லிலிருந்து தச்சனல் பொளியப்பட்ட பிள்ளையார் போலின்றி, ஸ்வயஞ்சோதி மாத்திரமாயிருக்கும் "பொளியாத" (இதுவே 'பொல்லா' என்று திரிந்தது) பிள்ளையார் பகவத் ஸ்வரூபமே யாதலால் பொல்லாப்பிள்ளையார் ஸ்வயம் பிரகாச ஆத்மா. அவருடைய சக்திகள் மூன்றும் ஆத்ம சக்திகள். ஆகையால் இவர்தானே அடியார்களுக் கெல்லாம் தலைவர். உலகத்தில் நன்மை தீமையிரண்டுக்கும் காரணமாயிருக்கிற பூத சக்திகளின் கூட்டங்கள் இவருடைய சக்திகள் மூன்றின் அம்சமாயிருத்தலால், இவர் அந்த பூத கணங்களுக்கெல்லாம் தலைவர். அதனுல் கணேசர் என்று இவருக்குப் பேர் வந்தது. விக்னங்களை யெல்லாம் போக்குவதற்கான சாதன சாதகங்களை யளித்துத் திருவருள் சாதிக்க வல்லவராதலால், விக்நேசுவரர் என்றும் இவருக்குப் பேருண்டு. "கணுநாம் பதி:" என்றபடி கணபதியாகவும், விக்நேசுவரராகவும் ஸ்வயஞ்சோதி வடிவாயு மிருக்கிற இந்த "பொல்லாப்பிள்ளையாரை" வணங்கி அவரிட்டதோர் கட்டளையாக அவருடைய உண்மையையறிந்தவரான மோஹன தாஸ் கரம் சந்திர காந்தி யென்று திருநாமம் பெற்று திருத்தொண்டிற் சிறந்தவராய் விளங்கும் ஆத்ம நேசரும் இந்தியாவின் ஆத்ம புத்திருமான இவர் குணுதிசயங்களைக் குறித்து, நாம் பண்ணின பாபம் தீரவும், கண்ணிய புண்ணியம் தூண்டவும், சிறிது விஸ்தரிக்க ஐங்கரன் நமக்கு அருளும் தெருளும் அளிப்பாராக வென்று அவர் திருவடிபணிந்து துதிக்கிறோம்.

### தென்னுப்பிரிக்கா சரித்திரம்.

பாரத வருஷத்திலே பரதக்கண்டம் நாமிருக்கும் தேசம். இதை ஆசியா கண்டமென்றும் இந்தியா தேசமென்றும் சொல்லுவர். இதற்குத் தென்மேற்கே ஆபிரிகா கண்டமொன்றிருக்கிறதென்பது யாவர்க்கும் தெரிந்த விஷயமே. அந்த ஆபிரிகா கண்டத்தின் தென்பாகத்தில் 'போவர்கள்' குடியேறிப்பல வருஷங்களுக்கு முன் ஒரு குடியரசுநாட்டை ஸ்தாபித்து வாழ்ந்து வந்தார்கள். சில வருஷங்களுக்கு முன் பிரிடிஷ் ராஜ்ஜியத்தாருக்கும் இவர்களுக்கு முண்டான சண்டையில் ('தென் ஆபிரிகா சண்டை' யென்றும்

"போவர்யுத்தம்" என்றும்பேர்உண்டு) இவர்கள் பிரிடிஷ் தேசத்தாரால் முறியடிக்கப்பட்டு, இவர்களுடைய தேசம் பிரிடிஷ் ராஜ்யத்தோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது. பிந்தி யிரண்டொரு வருஷகாலத்துக்கெல்லாம் இவர்களுக்கு ஸ்வய ஆட்சி கொடுப்பதாகச் சொல்லி, "தென் ஆபிரிகா யூனியன்" என்கிற பேரால், டிரான்ஸ்வால், ஆரஞ்ச் ப்ரீஸ்டேட், நேட்டால் முதலான பல நாடுகளை ஒன்று சேர்த்து அதற்கு ஒரு பார்லிமெண்டு சபை ஏற்படுத்தி அவர்கள் தேசபரிபாலனத்தை யவர்கள் தானே பார்த்துக்கொள்ளுகிற தென்றும், பிரிடிஷ் கவர்ன்மெண்டார் பொதுவில் பரதேச ஸம்பந்தமான காரியங்களில் மட்டும் தங்களுடைய சொந்த அதிகாரிகளைக் கொண்டு மேன்பார்வை செய்து வருகிறதென்றும், மற்றப்படி அவர்கள் உள்நாட்டுத் துரைத்தன விஷயங்களில் இவர்கள் தலையிடுகிற தில்லை யென்றும் பட்டயம் எழுதிக்கொடுத்து அவர்களுக்கு ஸ்வதந்திரம் அளித்துவிட்டார்கள். இந்த தேசத்தி லிருப்பவர்களெல்லாம் ஐரோப்பிய தேசங்களிலிருந்து வந்து குடியேறின வெள்ளைக்காரர்கள். தென் ஆபிரிகா தேசவாசிகள் கறுப்பு மனுஷர்களானதும், நாகரிகமின்மைபற்றி வெள்ளைக்காரர்கள் அவர்களை மூலை முடுக்குகளில் துரத்திவிட்டு தேசத்தைக் கட்டிக்கொண்டு விட்டார்கள். இங்கே ஏராளமான நிலக்கரி, பொன், வெள்ளிசுரங்கங்களும், வைர சுரங்கங்களும் கூட விருக்கின்றன. இந்த சுரங்கங்களில் வேலைசெய்து உலோகங்களை யெடுத்து சுத்தி செய்துவர அனேக வெள்ளைக்காரர்கள் வந்து குடியேறி பணந்தேடிச் சென்றவர்கள் போக அத்தேசத்தில் தானே குடியேறி வசித்தவர்கள் தொகை மிகுதியாக அந்நாடு இப்பொழுது அவர்களுடையதாக ஆய்விட்டது. இப்படிக் குடியேறிய வெள்ளைக்காரர்களில் பலர் தோட்டப்பயிர் செய்யும் முதலாளிகளாகவும் இருக்கிறார்கள்.

இந்தியர்கள் நிலைமை.

சுமார் 60 வருஷங்களுக்கு முன் தென் ஆப்பிரிகா தோட்டக்காரர்கள் தோட்டங்களில் கூலிவேலை செய்வதற்கு ஆட்கள் கிடைக்காமல் திண்டாடினபடியால் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். அப்போது பிரிட்டிஷார் இந்தியா கவர்ன்மெண்டைத் தூண்டி பல ஆசை வார்த்தைகளைக்காட்டி இங்கிருந்து ஒப்பந்தக் கையெழுத்திட்ட கூலிகளை அனுப்பச் செய்தார்கள். இம்மாதிரி இந்த தென்னாபிரிகா நாட்டில் எத்தனையோ பேர்கள் இந்தியர்கள் கூலிவேலைக்கு ஒப்பந்தம் செய்து கொண்டுபோய், ஒப்பந்தம் முடிந்தபின், அவர்களுடைய சொந்த புத்தியினாலும், உழைப்பினாலும் முன்னுக்கு வந்து சீரும் சிறப்புமாக அத்தேசத்தை தமக்குக் குடியிருப்பு நாடாகச் செய்துகொண்டு வசித்து வருகிறார்கள். இவர்கள் புத்தியிலும், ஊக்கம் முயற்சி, உழைப்பு இவைகளிலும், சிக்கனமாக ஜீவனம்செய்து கண்ணியமாக வசிப்பதிலும், வெள்ளைக்காரர்களை விட மேம்பட்டவர்களாய் இருக்கிறபடியால், அவர்களுக்கு இந்தியர்களிடத்தில் வெறுப்பும் வைஷம்யமும் உண்டாக நேரிட்டிருக்கிறது. கஷ்டப்பட்டுக் கூலிவேலை செய்யமட்டும் இந்தியர்கள் தேவையாயிருக்கிறது. அவர்கள் வேலை செய்ய ஒப்பந்தம் செய்து கொண்ட காலம் கழிந்தபின் அத்தேசத்தில் ஸ்வதேச்சையாக விருப்பது அவர்களுக்கு அநர்த்தமாக முடிகிறது. இது காரணத்தினாலே கேவலம் ஒப்பந்தப்படி கூலி செய்யும் வேலையாட்களைத் தவிர, மற்றவர்களை அத்தேசத்திலிருக்கவிடக் கூடாதென்கிற எண்ண முண்டாயிற்று. இந்த எண்ணத்தை நிறைவேற்றுவதற்காக அவர்கள் இல்லாத கொடுமைகளெல்லாம் செய்து பொல்லாத தீங்கிழைத்து வருகிறார்கள். 'பகையைப், பகையால் வெல்லலாகாது" என்பதை இந்தியர்கள் ஸ்வபாவமாகவே யறிவார்கள்,

ஆதலால் அவர்கள் சிறுபான்மையரும், துரைத்தனத்தில் யாதொரு அக்குமில்லாத வருமாயிருப்ப துணர்ந்தும், அவர்கள் பகையைப் பாராட்டாது, தங்கள் மட்டில் ஒரு புறமாயிருந்து நாணய சீவனம் செய்து கண்ணியமாய் வசித்து வந்தார்கள். இப்படி நாணயமாகவும் கண்ணியமாகவும் வசித்து வருகிறவர்களை பலாத்காரம் செய்து பலவகையிலும் அவர்களுக்கு இடையூறியற்றி அவர்களை நாட்டைவிட்டுத் துரத்த வேண்டுமென்பது அத்தேசத்து வெள்ளைக்காரர்களுடைய எண்ணம். அந்த எண்ணத்துக் கிசைந்து துரைத்தனத்தாரும் பல நிர்ப்பந்தமான சட்டங்களைச் செய்து அவர்களை ஊரைவிட்டோட்ட முயற்சித்து வருகிறார்கள். இப்படிச்செய்வது அநியாயமும் அக்கிரமமும் என்று தெரிந்தாலும், அவர்கள் கர்வம் தலைக்கேறி இது எங்கள் தேசம் இங்கே இந்தியர்களை இருக்கவிடோம் என்று விருதுகட்டிக் கொண்டு புறப்படும் போது இந்தியர்கள் என்ன செய்வார்கள், பாவம்! அவர்கள் அக்கிரமங்களை வெல்லவும் கூடாமல்,மெல்லவும் கூடாமல் தவிக்கிறார்கள்.

நம்மவர்கள் குறைகள்.

இப்படித்தவிக்கும் அவர் கஷ்டங்களை முழுமையும்எழுத நம் கை நடுங்குகிறது. ஆகையால் சிலவற்றை மட்டும் இங்கு கூறுவோம். தலைக்கு மூன்று பவுன் நம்மவர்களுக்கு மாத்திரம் ஆண் பெண் எல்லாருக்கும் ஆள்வரி விதிக்கப் பட்டிருக்கிறது.

நமது மகமதிய, ஹிந்து விதிகளின்படி விவாகஞ் செய்யப்பட்ட ஸ்திரீகளை தர்மவிவாக மனைவிகளென்று அந்தத் தேசத்துச் சட்டம் ஒப்புக் கொள்வதில்லை.

நம்மைச் சேரிகளிலே குடியிருக்கச் செய்தல்; இரவு எட்டு மணிக்கப்பால் வெளியேறக் கூடாதென்று சொல்லுதல்; நடக்கும் ரஸ்தாக்களில் நமக்குச் சில வழிகளைத் தடுத்தல்; நம்மவர்களை அவமானமாக ஐந்து விரல் மைதோய்த்து வைத்துப் பதிவு செய்து கொள்ளும்படி நிர்ப்பந்தித்தல்; புதிதாக நம்மவர்கள் அங்கே போய்க் குடியேறலாகாதென்று விதித்தல்; அங்கேயே பரம்பரையாக வாழ்வோர் இந்தியாவுக்கு வந்தால் அங்கே திரும்பிப் போகலாகாதென்று கட்டுப்படுத்துதல்; நமது வியாபாரிகளுக்குப் பலவிதக் கஷ்டங்கள் ஏற்படுத்துதல்; அந்தத் தேசத்திலேயே நம்மவர் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு எல்லை தாண்டக்கூடாதென்று நிர்ப்பந்தம் செய்தல்;—இப்படி எண்ணித்தொலையாத வழிகளில் நமக்கு அவர்கள் இடர்செய்கிறார்கள். பல சமயங்களில் அந்நாட்டு மந்திரிகள் இந்த நிஷ்டூரங்களிலே சிலவற்றை நீக்குவதாக வாக்குக் கொடுத்துவிட்டுப் பின்பு நம்மவர்களின் ஆக்கிரோஷம் குறைந்தவுடனே வாக்கை நிறைவேற்றாமல் ஏமாற்றியதுமுண்டு.

சுருங்கச் சொல்லில்,—நம்மை அங்கிருந்து துரத்திவிட வேண்டும், என்று கங்கணம் கட்டியிருக்கிறார்கள். காரண மென்னவென்றால் நம்மவர்கள் நாகரீகத்தில் குறைந்தவர்களாம்! குதிரை தூக்கிப்போட்டது மன்றி குழியுமொன்று கூடப்பறித்த கதையாகத் தானிருக்கிறது. இப்படி அவர்களுக்கு விட்டுக் கொடுப்பது இந்தியாவினுடைய பெருக்கும் இந்தியர்களுடைய கௌரவத்துக்கும் கண்ணியத்துக்குமே குறைவு வருவதாயிருப்பதால், நம்மவர்கள் மனச்சாட்சி யறிய இவர்களுடைய அக்கிரமங்களுக்கு உடன்படமாட்டாமல், எல்லா கஷ்ட நிஷ்டூரங்களையும் பொறுத்துக்கொண்டு சமாதான வழிகளிலே தங்கள் குறையைத் தீர்த்துக்கொள்ளப்பார்த்தார்கள். அது முடியாமற் போகவே பகையைப் பகையால் வெல்வது கூடாதென்றுணர்ந்து 'இஷ்ட விரோதம்'—இஷ்டத்துக்கு அதாவது மனச்சாட்சிக்கு விரோதமாய் நடப்பது முடியாதகாரிய மென்று வைராக்கிய சித்தம்கொண்டு அவர்கள் அதிகாரத்துக்குட்பட்டும் அவர்கள் அபிப்பிராயத்துக் குடன்படாதவர்களாய் 'இஷ்ட விரோத வைராக்கியமுஷ்டி'

சாதனத்தால் அவர்கள் இஷ்டத்துக்கு இசை யாதவர்களாய் எதிர்த்து நின்று வருகிறார்கள். இதன் உள்மர்மமான தர்மம் இது வென்று சுருங்கச் சொல்லி விளங்கவைப்போம்.

தேஹ தர்மத்திலும் மனோதர்மம் பெரிது.

அக்கிரமங்களை வெல்லவும் மெல்லவும்கூடாமல் தவித்தாலும், நம்மவர்கள் சலித்தார்களில்லை. மனம் சலிக்காதபோது உள்வலி ஊன்றி உறம்பெறும். உள்ளத்துணர்வு தானே எல்லாவலியும் கொடுக்கும். எல்லா வலியையும் கெடுப்பதும் அதுவே. "Conscience makes cowards of us all" என்பது உண்மை, உண்மை. தர்மமே ஜயிக்குமாதலால், அதர்மம் சிறிது காலம்தான் தலையெடுத்து ஆடும். அந்தச் சிறிது காலத்துக்கு மட்டும் கொடுமையைப் பொறுக்க சக்தியுண்டாமாயின், அதர்மம் அதன் இயல்பால்தானே வலியிழந்து தலைசாய்ந்துபோம். முரட்டுப்பலம் மண்கொட்டு பூமியைக்கொத்துவதுபோல், தேஹத்தைக் கொத்திக் குளறி ஹிம்சை புரியும். ஆனால் அந்த தேஹ ஹிம்ஸையினால் மனோதிடம் உறுவதும் அறுவதும் ஹிம்ஸிப்போன் கைவசமாகவில்லை. தேஹத்தைக்கொண்டு மனதைக் குலைக்கவேண்டுமென்பதே ஹிம்ஸிப்போனுடைய கொள்கையும் கருத்துமாயிருக்கிறது. ஆனால் மனோதர்மம் அவனுக்கு அனுகூலமாகவில்லை. மாசற்ற மனம் தேஹத்தைத் தூசுபோல் நினைக்கும். ஏனெனில், தேஹம் அதன் வசப்பட்டது. தேஹத்தை அடித்தாலும் இடித்தாலும் அதைத் துன்பமாக நனைக்காமல் இன்பமாக மாற்றும் வாதசக்தி நிர்மலமடைந்த மனசுக்குண்டு. இது வேதாந்தம் என்று வாச்சா வேதாந்திகள் இகழலாகாது. சாஸ்திர சித்தாந்தமும் உலகானுபாவமும் இதை ருஜுப்படுத்தும். யேசுநாதர் சிலுவையிலறையப்பட்டு நிர்மூடர்களான வீரர்களால் கற்றறி மூடரான அதிகாரிகள் ஆஞ்ஞைப்படி துன்பப்படுத்தப் பெற்றாலும் "தேஹோஹம்" "நான் தேஹம்" என்கிற பாவம் அற்ற அவருக்கு அது துன்பத்தை விளைக்கவில்லை. "ஐயோ! இந்த மூடர்கள் இப்படி பாவத்தைக் கட்டிக்கொள்கிறார்களே!" யென்று அவர்களுடைய அறியாமைக்காக அவர்கள் செய்யும் கொடுமையை மன்னிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார். சாதாரணமாக சித்தவிருத்தி நிரோதம் செய்து அலையும் மனத்தை யடக்கிய யோகபுருஷர்களுக்கு தேஹதத்துவங்கள் சொன்னபடி கேட்கும். அவர்கள் தேஹத்தை ஊசியால் குத்தினாலும் அந்த வலியைத் துன்பமாக வின்றி இன்பமாக மாற்றிக்கொள்ளும் சக்தி அவர்களுக்குண்டு. நமது தேசத்தவரான ப்ரொபெஸர் ஜகதீச சந்திர போஸ் அவர்கள் இதை சாஸ்திரோக்தமாய் நிர்மாணம் செய்திருக்கிறார்.

மனோசக்தியிலும் ஆத்மசக்திபெரிது.

ஆதலால் தேஹதர்மத்தை யனுசரித்துக் கொடுங்கோல் புரியும் மன்னன் அதிலும்பெரிதான மனோ தர்மத்தால் தட்டுக்கெட்டுத் தடுமாறிப்போகிறான். ஆகையால் முரட்டு பலம் பாவனா சித்தர்களாயிருக்கிற மனிதர்களை வெல்ல முடியாததாயிருக்கிறது. பெருங்காற்று மழை, நன்றாக வேரூன்றி ஆகாயத்தை யளாவிய மரங்களைச் சிதைத்து வேரோடு பிடுங்கித்தள்ளும் சக்தி வாய்ந்ததாயினும், ஆற்றோரத்தில் நெருங்கியிருக்கும் நாணற்புல்லைச் சிதைக்கும் சக்தி அதற்கு இல்லை. காற்றடிக்கும்பொழுது தலைசாய்ந்து அதற்கிசைந்து கொடுத்து, காற்று நின்றதும் நாணல் தன்தலை நிமிர்ந்து எப்போதும்போல் நிற்கும். மனோ தர்மம் அறிந்த மானிடர்களுக்கு இந்த சக்தி இயல்பாகத் தானேவரும். ஏனெனில் இது மனோ தர்மசக்தியாயிருக்கிறது. ஆறுபோலோடும் அறிவானந்த வெள்ளத்தின் கரையிலிருந்து அந்த அறிவினால் துலங்கப் பெற்ற மனம் நாணற்புல்போல் தூய்மைபெற்று தீமை யெல்லாம் வெல்லும் சக்திவாய்ந்ததாயிருக்கிறது. இது ஆத்மசக்தியின் பிரதிபிம்

பமாகவிருக்கிறது. (இராக்ஷஸர் குலமறுக்கப் பிறந்தவரான தேவகுமாரன், (சுப்பிரமணியம் என்பர் இந்துக்கள் அவரை) சரவணப் பொய்கையில் உதித்தாரென்றுள்ள ஐதிகத்தின் உள்மர்மம் இதுவே. 'மாட்டுத் தொழுவத்தில்' பிறந்தாரென்னும் ஐதிகமும் அறியாப்பசுக்களான மானிடரிடையே தேஹமெடுத்தா ரென்னும் உண்மையையே குறிக்கும். ஆத்ம சக்தியிலிருந்து மனோசக்தியும், மனோசக்தியிலிருந்து தேஹசக்தியும் உண்டாகிறதேயன்றி, வேறு இதற்கு எதிர்முறையாகவில்லை. இது உண்மை. தேஹமே ஆத்மாவுக்கு (அறிவுக்கு) ஆதாரம் என்று நினைப்பவர்கள் மஹா பலிஷ்டர்களாயிருந்தும் அபலைகளான ஸ்திரீகளால் நாசமடைந்திருக்கிறார்கள். ஈசுவரனாலும் நாசமுறாதபடி வரம் பெற்று ஈசுவரனையும் தன் கையைத் தலையில் வைத்த மாத்திரத்தில் தஹிக்கவல்ல அதிமேலான தபோவலி பெற்ற பத்மாசுரன் ஒரு அப்ஸரஸ்திரீ செய்த ஜாலவித்தையினால் தன் தலையில் தானே கையைவைத்துக்கொண்டு தன்தபோ வலியால் தானே கேடுண்டு மாய்ந்தான். ராவணேசுவரன் சீதையாலழிந்து கெட்டான். மயில்ராவணனும் பஞ்சமுகியனுமாரால் ஜெயிக்கப்பட்டான்.

ஆத்மசக்திக்கு அளவில்லை.

இப்படிச் சொல்லும் கதைகளெல்லாம் ஐதிகம். அதாவது தத்துவங்களான உண்மைகளைச் செய்கைகளான தொழில்களிலேற்றித் தத்துவஞானம் பெறாத ஜனங்கள் பக்தி சிரத்தையினால் உண்மை வழிப்பட்டுய்யுமாறு அவர்களுடைய மனோபாவங்களைக் கிளப்பி பாவனாதீதமான உண்மைகளால் பாவனாரூபமான அவர்கள் மனதை வசப்படுத்தச் சொல்லிய பூர்விக கதைகள். புராணம் என்றால் பூர்விகமானகதை யென்றே அர்த்தம். இதிஹாஸம் என்றால் உதாஹரணமான கதைகள் என்று அர்த்தம். புராண இதிஹாஸங்களிரண்டும் தத்துவ விசாரம்செய்து உண்மையறிய மாட்டாத ஜனங்களுக்கு சிரவண மாத்திரத்தால் உண்மைப் போதனை செய்து பக்தி சிரத்தையினால் அவர்கள் நல்வழிப்பட்டுய்யவேண்டுமென்று தத்துவதரிசனம்கண்ட ஸ்வாத்மானந்தச்செல்வர்கள் செய்துள்ள கிரந்தங்களாம். புராதனமானது புராணம். புராதனம் என்றால் பண்டைநாள் தொட்டிருப்பது. அப்படியென்றால் கட்டுக்கதையாகத்தானே யிருப்பது என்று அர்த்தமில்லை. ஆதிகாலம்தொட்டு ஆத்ம விசாரம் செய்கிறவர்கள் விசாரமுடிவில் கைவல்ய முக்த ஸத்தியாநந்தசாந்த அவதூதாத்மனாய் அனுபவசித்தி பெற்ற பின் அவற்றினுண்மையை ஆராய்ந்தறிந்து சரியென்று கண்டு ஒப்பி அதைமாற்றாது விட்டுவந்ததால் அதற்குப் புராணமென்று பேர்வந்தது. புராணமென்பது கட்டுக்கதையானாலும் "பொய் சொன்னாலும் பொருந்தச்சொல்" என்கிற பழமொழிப்படி ஸத்யஞானானந்த அனுபவம் பெற்று பொய்யைப் பொருந்தச்சொல்லக் கற்ற இருஷிகள் (பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரம் பெற்றவர்கள்) கட்டிவிட்ட பொய்க்கதை யாதலால், அது இப்பொய்யுலகில் மெய்யாகவே விளங்கும். எல்லாம் அறிவுமயமாயிருக்க, அறியாமை யென்பது ஒரு சங்கல்பமே தவிற வேறில்லை. மனோசங்கல்பத்தைக் கெடுக்க சங்கல்ப சக்திக்கு மூலமும் ஆதாரமுமான ஆத்ம சக்திக்கு அளவிலா ஆற்றலுண்டு.

அவிவேக அபிமானத்தால் வருங்கேடு.

இந்த ஆற்றல்கொண்டே முன்காலத்தில் இருஷிகள் கோவணாண்டிகளா யிருந்துகொண்டு கொடி, படை, சேனை, அரண்முதலிய அங்கங்கள் எல்லாம் மிகப்பொருந்தவாய்த்த அரசர்களையும் நடுங்கச் செய்தார்கள்.

மனிதன் மிருகத்திலும் மேலானவனாயிருப்பது அவனுடைய மனோசக்தியினாலன்றி வேறல்ல. மனம் என்பதே நினைப்பும் மறப்புமாயிருப்பது. இதையே ஸங்கல்ப விகல்ப ரூப

மாயிருக்கிறதென்று வடமொழியிற் சொல்லு வர். கல்பம் என்பது காலத்தின் கூட்டம். காலதத்துவத்தை விளக்கும் கிரந்தசாதனங் களின் திரட்டுக்கும் பேர். "கல்பசாதனம்" என்றால், "காலத்தை வசப்படுத்தும்வழி" என்று பொருள்படும். காலம் மனோ ரூபமா யிருக்கிறது. அதாவது, இரவுபகல் ரூபமாயிருக்கிறது. ஸங்கல்பம் என்பது பகலுரு. விகல்பமென்பது இரவுரு. இவ் விரண்டிற்கும் காரணம் அறிவு, அறி யாமை. அறிவு ஒன்றேயுள தாயினும், அறியாமை யென்பது சங்கல்ப சக்தியால் உண்டாயிற்று. சங்கல்பம் மனதின் தொழில். மனது அறிவின் விகாரம். குயவன் பானை செய்குவான் மாத்திரமாயில்லாமல் தான் செய்த பானையை "என் பானை" யென்று அதில் அவிவேக அபிமானம் வைக்கும்போது அவன் அறிவு தெளிவிழந்து விகாரப்பட்டுப் போகிறது. பானை செய்யும்பொழுது முன் செய்த பானை எங்கு உடைந்துவிடுமோ என் கிற எண்ணம் வந்து அவன் அறிவைச்சலிக் கச் செய்ய மனத்தெளிவிழந்து புத்திமயங்கிப் போகிறான். இப்படி நிச்சிந்தையாய் எல்லாச் சிந்தைக்குங் காரணமாயிருக்கும் அறிவில் சிந் தை வந்து குடிப்புகுந்துகொண்டு ஸ்படிகம் போல் நிர்மலமாய் விளங்கும் அறிவில் அத னுடைய குணதோஷங்களைப் பிரதிபலிக்கச் செய்து, அந்தக் குணதோஷங்களும் தன்ன தென்று நினைக்கும்படி அறிவை மயக்கினால் அதுதான் மனம் என்று சொல்வது. மாயை யென்பதும் இதுவே. இந்த மயக்கம் "எனது" என்கிற அபிமானத்திலிருந்துண்டாகி அறி வின் சாக்ஷிமாத்திரமாயுள்ள நிஷ்களத் தன்மை யைக் கெடுக்கிறது. சந்திரனிடத்தில் களங்க முண்டானதுபோல இது புத்தியினிடத்தில் களங்கத்தையுண்டு பண்ணுகிறது. நிஷ்களங் கமான அறிவு அபிமான தோஷத்தால் களங்க முற்றால் அது தன் ஸ்வபாவமான ஆத்ம சக் தியை மறைத்து விடுகிறது.

"கோபம், பாபம், சண்டாளம்."

இப்படி அபிமானத்தால் வருங்கேடு ஆத்ம சக்திக்குப் பங்கம் விளைக்கிறது. ஆத்ம சக் திக்குப் பங்கம் விளைந்தால் அது கிரகணம் பிடித்த சந்திர சூரியர்களைப்போல் விஷயங் களை உள்ளபடி விளக்கிக்காட்டும் சக்தியிழந்து விடுகிறது. ஒளிமழுங்கின புத்தியால் விஷய ஆராய்ச்சி செய்தால் "மருண்டவன் கண் ணுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்கிற மூத்தோர்சொல் வாக்குப்படி அநர்த்தம் விளைக் கிறது. தன் மனதிலுதிக்கும் எண்ணங்கள் தானே புறத்தில் தோன்றி விஷய சுபாவத்தை யுள்ளபடி காணவொட்டாமல் மறைக்கிறது. "Man sees as he is" என்பது உண்மை. "மனம் போலிருக்கும் மாங்கல்யம்." மனிதன் பாவனாஸஹிதனா யிருப்பதால், அவன் என்ன நினைக்கிறானோ அதுவே தானாகிறான். "யத் பாவம் தத் பவதி!" அவன் என்ன நினைக்கி றானோ அதுவே அவன் மனோசக்தியால் சம்ப விக்கிறது. பகைகொண்டாடும் மனிதன் எல் லாரையும் பகைவனாக நினைக்கும் கதிக்கு வந்து விடுகிறான். துவேஷம் பாராராட்டு கிறவன் துவேஷத்துக்கே ஆளாகி புத்தி யிழந்துபோய்விடுகிறான். "கோபம், பாபம், சண்டாளம்," என்பது உண்மை. மனம் கொதித்தெழுவது கோபம். அந்த மனக் கொதிப்பிலிருந்து மனோதர்மத்துக்கு விரோ தமான காரியங்கள் செய்ய நேரிடுவதால், அது கர்ம வசத்தால் பாபமாகிறது. அந்தப் பாபச்செயல் தானே வரவர முதிர்ந்து சண் டாளத்தனம் செய்யத் தூண்டுகிறது. தென் ஆபிரிகாவில் இந்த மனோதர்மங்கள் இப் பொழுது நிதரிசனமாக நடந்துவருகிறது. வெள்ளைக்காரர்கள் அபிமானத்தால் அறி விழந்து இந்தியர்களைத் துரத்தச் செய்த யத் தனங்கள் பலிக்காமற்போக, அதனால் மனங் கொதித்து தர்ம விரோதமான சட்டங்களைச் செய்தார்கள். ஆணுக்குப் பெண் ஆகாமலும் தாலிகட்டி வாழ்ந்த பெண்டுகளையும் பத்தினி

களையும் பதிவிரதா பங்கம் வர 'வைப்பாட்டி கள்' என்று நியாயஸ்தலத்திலிருந்து தீர்ப்புச் சொல்ல, பத்தினிகள் மனந்தாளாமல், உங்கள் சட்டம் இயற்கை தர்ம்ம விரோதமாயிருத் தலால் அதை நாங்கள் ஒப்பமாட்டோம். இஷ்ட விரோதமான சட்டம் தர்ம விரோத மாகவு மிருத்தலால் எங்கள் இஷ்டபலமே பலமன்றி உங்கள் தேசபலமும் ராஜ பலமும் பலமல்லவென்று, அவர்களது முரட்டு பலத் தைத் தங்களுடைய இஷ்ட பலத்தால் எதிர்க் கத் கலைப்பட்டு ஸாஹஸம்செய்து வருகிறார் கள். தாலிகட்டி வாழ்ந்து பிள்ளைப் பேறு பெற்ற பெண்பெண்டாட்டிகளும், தாய்மார் களும், குழந்தை குஞ்சுகளோடு இஷ்ட விரோத வைராக்கிய முஷ்டி செய்யக் கிளம்பி விட்டார்கள். பாராளும் இராஜாங்கத்தார் குழந்தை குஞ்சுகளையும், ஏழை எளியவர் களையும் மான ஈனமின்றி வதைத்துச் சிறையி லடைத்துக் கொடுமை செய்து வருகிறார்கள்.

ஏழைகள் பட்டுவரும் அவஸ்தைகள்.

இக் கொடுமையினால் ஆயிரக்கணக்காக ஏழை ஜனங்கள் சிறையில் வீழ்ந்தும் விழக் கூடிய நிலையிலும் இருக்கிறார்கள். நம்மவர் களின் தலைவராகிய ஸ்ரீமான் மோஹனதாஸ் காந்தி என்பவரைப் பிடித்து 60 பவுன் அப ராதம் கொடுக்கவேண்டும், அல்லது ஒன்பது மாதம் கடுங்காவல் தண்டனை பெறவேண்டு மென்று தீர்ப்புச்செய்தார்கள். அவர் ஒன்பது மாதம் சிறைக்குள்ளே யிருப்பதாக ஒப் புக்கொண்டுவிட்டார். இது சமீபத்தில் நடந்த செய்கை. மறுபடி இருமுறை மும்மூன்று மாதச் சிறைத் தீர்ப்பு இம்மகானுக்கு விதித்தி ருக்கிறார்கள். அனுகூலமாக இருந்த ஐரோப் பியரிலேகூடச் சிலர் பிடிபட்டிருக்கிறார்கள். முக்கியமாய் மிஸ்டர் போலக்குக்கும், காலன் பெக்குக்கும் மும்மூன்றுமாதம் சிறையிருப்புத் தண்டனையாம்! மானிடசகோதரர்களான நம்ம வர் படும் கஷ்டத்திற்குப் பரிதாபப்பட்டு நம்மவருக்கு உதவி செய்ததே இவர்கள் குற்றமாம். அன்னவரை ஆதரித்த குற்றத் திற்காக மிஸ்டர் வேஸ்டும் பிடிபட்டிருக்கிறார். பெண்களும், ஆண்களும், குழந்தைகளும் எண்ணிறந்த கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு நமது தேசத்தின் மானத்தைக் காக்கும் பொருட்டாக இந்தவைராக்கிய முஷ்டியுத்தம் செய்து வருகிறார்கள். தொழில்களையும் வியாபாரங்களையும் விட்டு விட்டு நம்மவர் ஆயிரக்கணக்காக இந்த ஸாஹஸ முயற்சியிலே சேர்ந்திருக்கிறார்கள். தலைமுறை தலைமுறை யாகச் சேர்த்துவைத்திருந்த பொருளெல்லாம் இந்தப் போராட்டத்திலே செலவாய்விட்டது. கூலிக்காரர்கள் ஆயிரக்கணக்காகச் சுரங்க வேலைகளை விட்டுவிட்டு இதில் சேர்ந்தார்கள். அந்தராஜாங்கத்தார் மிகவும் அநாகரிகமாகவும் சட்ட விரோதமாகவும் இவர்களைத் திரும்பவும் சுரங்கங்களுக்குத் துரத்தி, மிருகத்தன்மை யாய் நடத்தி சுரங்கமானேஜர்களைக்கொண்டு முதுகில் ரத்தம் ஒழுகும்படி காண்டாமிருகத் தோலினால் செய்த சவுக்கால் அடிக்கச்செய் தும் துப்பாக்கியால் சுடச்செய்தும் வேடிக்கை பார்க்கிறார்கள். ஆயிரக்கணக்காக நம்மவர் சாப்பிடச் சோறில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். இவர்களுடைய சாப்பாட்டுச் செலவுக்குப் பணம் நமது தேசத்திலிருந்து தான் போயாக வேண்டும். இந்த ஸ்திதியிலேகூட நம்மவர் இந்தத்தர்ம யுத்தத்தை நிறுத்துவதில்லை யென்று நிச்சயித்து ஸாஹஸம் செய்கிறார்கள். இவர்களுடைய நிலைமை முழுவதையும் அவர வர்கள் மனோபாவ சக்தியால் ஊகித்துணர்ந்து கொள்ள வேண்டுமேயன்றி ஏட்டில் எழுதிக் காட்ட முடியாது.

"கெடுவான் கேடு நினைப்பான்"

"கெடுவான் கேடு நினைப்பான்" என்கிறபடி, தென்னாபிரிக்கா கவர்ன்மெண்டதிகாரிகள் இந்தியர்களுக்குக் கேடு செய்ய நினைத்துக் கொடிய பாதகம் செய்யத்துணிந்து விட்டார் கள். ஏழைகளை மிருகங்கள்போல் கொடுமை யாக நடத்துவது மன்றி, சிறைச்சாலையி

விட்டும் பட்டினிபோட்டும் கொல்லப்பார்க்கிறார்களாம். இந்தக் கொடுமை உலகெங்கும் பரவி எல்லா சிஷ்டர்கள் மனத்தையும் புண்படுத்தி விட்டது. சென்னைக்கு விஜயமாய் வந்த அரசர் பிரதிநிதியவர்கள் தென்னாபிரிக்கா கவர்ன்மெண்டார் செய்யும் அக்கிரமங்கள் பொறுக்காமல், நாகரீகமுள்ள கவர்ன்மெண்டார் இப்படிக்கொடுமையிழைப்பது அவர்களுடைய மனுஷத்தன்மைக்குக் குறைவிழைப்பதாயிருக்கிறதென்றும், அவர்கள் உலகொப்ப நடந்துகொள்ளவேண்டுமானால், ஏழை ஜனங்கள் இஷ்ட விரோதத்துக்குள்பட மாட்டோமென்றால், அதற்காக அவர்களை ஆடுமாடுகள் போல் கொடுமை புரிந்து ஈனமாய் நடத்துவது பொறுக்கக்கூடியதாயில்லை யென்றும், இதைப்பற்றி அவர் இந்தியாமந்திரியவர்களுக்கு எழுதித்தெரியப்படுத்தி இருக்கிறதாகவும் சொன்னார். "அஹம் பாவத்தாலே யழிந்தான் துரியோதனன்" என்பது மஹாபாரதத்தின் முடிவு. "கெடுவான் கேடு நினைப்பான்" என்பது கர்மதர்மம். "தன்வினை தன்னைச்சுடும்" என்பது உணராமல், கேவலம் லோகாயிதர்களான தென்னாப்பிரிக்கா தேசத்தாரின் பிரதிநிதிகளான அதிகாரிகள் கிறிஸ்து அவதாரமான 20-ம் நூற்றாண்டில் மஹாபாரதத்தில் குறிக்கப்பட்ட குருக்ஷேத்திர மஹாயுத்தத்தைத் தென்னாப்பிரிக்காவில் நடத்தத்துணிந்திருக்கிறார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவான் தன் சைனியங்களை யெல்லாம் துரியோதனனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் மட்டும் கச்சைகட்டிக் குதிரைசாரதியாகவிருந்து ஸ்ரீ "பார்த்தசாரதி" யெனப் பெயர் பெற்றதுபோல, மோஹனதாஸ் காந்தியவர்கள் நற்குலத்திற் பிறந்து நல்ல படிப்பும், வளர்ப்பும், குணமும், மணமும், ஆஸ்தியும், பாஸ்தியும் பெற்றவராயிருந்தும் எல்லாவற்றையும் தென்னாப்பிரிக்கா இந்திய சங்கத்தின் பொருட்டு எதிரிகள்வசமாகச் செலவு செய்து ஒப்புக்கொடுத்துவிட்டு தான் மட்டும் ஏழைபங்காளியாகவிருந்து அவர்களோடு ஜெயிலுக்குச்சென்று கடுஞ்சிறையிலிருந்து கொண்டு தர்மமே ஜெயமென்று நம்பியுழைத்து வருகிறார். இவர் பாரிஸ்டர். மஹாபுத்திசாலி. பிள்ளைகுட்டிக்காரர். இவ்வுலகில் எல்லா பாக்கியங்களுமிருந்தும் அதையெல்லாம் பொருட்டாக நினைக்காமல் கூலி வேலைக்கமர்ந்து நெற்றி வியர்வை நிலத்தில் சொட்ட வேலைசெய்து தனக்குதேடி கண்ணியமாய் வசிக்கும் ஜனங்களுக்கு ஆபத்ஸஹாயராயிருப்பதே பெரிய கௌரவமென்று தம்முடைய பத்தினியாரும் பிள்ளை பேரன்களும் ஜெயிலிலிருக்கத் தானும் ஜெயிலுக்குச் சென்று ஜெயிலிலிருந்து கொண்டுதானே அவருடைய அபாரமான ஆத்ம சக்தியால் எந்த கவர்ன்மெண்டானாலும் மனிதனுடைய இஷ்டத்துக்கு விரோதமாக அவனை யடக்கியாள முடியாது என்னும் மேலான பரமதத்துவத்தை உலகறிய நிரூபிக்கவேண்டி "இஷ்ட விரோதம்" என்கிற மஹா பெரிய ஸாஹஸ யுத்தத்தைத் தென்னாபிரிக்கா க்ஷேத்திரத்தில் நடத்திவருகிறார். ஏழை யெளியவர்களையும் தனவந்தர்களையும் ஒன்றாகப் பிடித்து ஜெயிலடைத்துக் கொடுமை புரிந்தும், பொறுத்தார் பூமியாள்வார் என்றபடி, அதற்கெல்லாம் எதிர்விரோதம் செய்யாமல் இஷ்டவிரோதம் ஒன்றே போதும் என்று "Passive Resistance Movement" என்கிற

"இஷ்டவிரோத வைராக்கிய
முஷ்டி ஸாஹஸம்"

செய்து கைங்கரியம் நடத்திவருகிறார் அதற்காக இந்தியாவில் ஆண்பெண் அனைவரும் கூடி அக்ஷபாத்திரப்பிக்ஷை யெடுத்தாவது மாதத்துக்கு 5,000 பவுன் விகிதம் அனுப்பக் கடமைப்பட்டவர்களாக கங்கணம் கட்டியுழைத்து வருகிறார்கள்.

தர்ம பிக்ஷை.

இப்படி நடந்துபோன கொடுமைகளையும், நடக்கும் கொடுமைகளையும் உள்ளபடி வரைந்

தால் வாசிப்போர் மனங்கொதிக்கும். ஆகையால், மனக்கொதிப்பு ஆத்மசக்திக்குப் பங்கம் விளைக்குமென்று, கொடுமைகளை யெல்லாம் சொல்லாமல், சுட்டிக்காட்டிவிட்டோம். ஆணோடு பெண்ணோடு பிறந்து பழகினவர்களெல்லாம், இதைச் சிந்தையில் வைத்து கவனிக்கவேண்டும். கவனித்து மனக்கொதிப்பை யடக்கவேண்டும். அடக்கி மனத்தின் சக்தியவ்வளவையும் இஷ்டம் என்கிற இச்சா சக்தி யாக மாற்றல் வேண்டும். இதற்கு நினைத்ததை முடிக்கும் ஆற்றலுண்டு. இந்த ஆற்றலைக்கொண்டு "தர்மமே ஜயமென்கிற பிக்ஷை" கேட்கும் நம்மவர்களுக்கு ஆத்ம சகாயம் செய்யவேண்டும். செய்வதோடு, இந்தியாவிற் பிறந்து இந்தியர்கள் என்கிற பெயர்வைத்துக்கொண்டு, வெறும் முரட்டு பலத்திற்கு பயந்து இஷ்ட விரோதமான காரியத்துக் குடன்படுவது கூடாதென்று வந்த கஷ்ட நஷ்டங்களையெல்லாம் ஆத்மசக்தியிலுள்ள நம்பிக்கையால் பொறுத்துக்கொண்டு "இஷ்டவிரோத வைராக்கியமுஷ்டி"ஸாஹஸம் செய்யும் நம் தேசத்தவரான ஆண் பெண் குழந்தைகள் அனைவரும் அற்பர்களால் சொற்பமாய் எண்ணப்படாதபடி அவர்கள் உயிர் உடலில் தரிப்பதற்கு வேண்டிய ஆகாரம் மட்டும் பெற்று இந்த மஹா ஸாஹஸ கைங்கரியத்தைத் தென்னாபிரிகா க்ஷேத்திரத்தில் நடத்தி வருபவர்களுக்குச் சகாயம் செய்யவேண்டுமாய்த் திருவருளை முன்னிட்டுப் பிரார்த்திக்கிறோம். தேஹி யென்றவர்க்கு நாஸ்தியென்று சொல்லாத இப்புண்ணிய பூமியில் அவதரித்த எல்லாரும் இந்த "இஷ்ட விரோத வைராக்கிய முஷ்டி" ஸாஹஸம் இனிது முடிய அவரவர்களாலான அளவுக்கு வஞ்சனையின்றி வேண்டிய உதவிபுரிய வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

"உருவிலாகும் சித்தியெல்லாம்
உலகத்தோர்க்கே."

மோஹனதாஸ் காந்தியினுடைய சரித்திரத்தை யெழுதச் சொன்னதற்கு அவருடைய மஹிமையை வர்ணித் தெழுதி, அவர் தேஹத்தை மறந்திருக்கிறதுபோல் நாமும் அவர் உலக கீர்த்தியை யெல்லாம் மறந்து அவருடைய ஆத்ம தேஜஸிலும் ஆத்மசக்தியிலும் ஈடுபட்டவராய் அவருடைய மஹிமையை மட்டும் ஆத்மஸ்துதியாகவேயெழுதி முடித்ததற்குக் காரணம் அவருடைய உருவத்திலும் அருவம் பலத்திருப்பதே யன்றி வேறில்லை. "உருவிலாகும் சித்தியெல்லாம் உலகத்தோர்க்கே" யென்றபடி தம் உருவினாற்பெற்ற பாக்கியமெல்லாம் உலக தர்மத்துக் கென்றே ஜகத் ஜநங்கு அர்ப்பணம் செய்துள்ள அவரை இத்தருணம் மனித ரூபத்தில் நினைப்பது கஷ்டமாயிருக்கிறது. ஆகையால் அவருடைய புகழுடம்பாகிய தேஜோரூபத்தையே கண்டு தரிசித்துக் கண்டபடி வர்ணித்தெழுதலானோம். அவருடைய பேராகிய காந்தியிலும் அவருடைய ஆத்மகாந்தி வலியதாய், ஊசியைக் காந்தம் இழுப்பதுபோல் நமது மனத்தை யிழுத்து விழுங்கிவிட்டது. இதை வாசிக்கும் ஒவ்வொருவர் மனத்தையும் இது கவருமாயின் நாம் பட்டபாடும் தொட்டகாரியமும் ஈடேறிற்றென்றே யுவக்கலாகும். ஓம் தத்ஸத்.

அர்ப்பணம்.

"உன்னை மறக்கி லென்தா யுயிரென்
னுடம்பில் வாழுமோ!
உன்பா லன்றிப் பிறர்பா லென்ற
னுள்ளஞ் சூழுமோ!
என்னைக்கொடுக்க வாங்கிக்கொண்ட
தென்ன சுருதியோ!
எந்தாய்! நின்னைக்கொடுக்க வென்பா
லின்று வருதியோ!"

மிஸ்டர் காந்தியும் மற்றத் தலைவர்களும் இப்பொழுது ஜெயிலிலிருந்து விடுபட்டிருக்கிறார்கள். நடந்த அக்கிரமங்களைப்பற்றி விசாரிக்க ஒரு கமிஷன் நியமித்திருக்கிறார்கள். அவர்கள் வேலிக்கு ஓணான் சாக்ஷியென்கிற கதையாக, இந்தியர்களுக்கு விரோதிகளும், அவர்கள் எதிரிகளுக்கு அனுகூலிகளுமானவர்

கள் சேர்ந்ததாயிருப்பதால், அந்தக் கமிஷனை பக்ஷபாதமற்றதென்றுஒப்புக்கொள்ள முடியாதென்று மனம் வெறுத்திருக்கிறார்கள். மிஸ்டர் காந்தி இந்த அநியாயங்கள் நடக்கும் வரையில் அதனாலுண்டாகும் கொடுமைக்கு வருந்தினவராய் தினம் ஒரு வேளைமட்டும் புசித்து உபவாஸமிருந்து வருகிறார். இவருடைய அபாரமான ஆத்ம சக்தியையும் உள்ளுணர் சக்தியையும் அறிந்த மிஸ்டர் ராட்க்ளிப் என்பவர் இவரைப்பற்றி "மஞ்செஸ்டர் கார்டியன்" பத்திரிகைக் கெழுதியிருப்பதை முகட்டி லெடுத்தச் சிட்டிருக்கிறோம். இதன் கீழ் அவருடைய பிறப்புவளர்ப்பு சரித்திரத்தையும் ஒரு சிறுவன் எழுதினபடி, பிரசுரிக்கிறோம்

---

## மோஹனதாஸ் கரம்சந்த்ர காந்தியின் சரித்திரச் சுருக்கம்.

### பிறப்பு வளர்ப்பு.

இவர் 1869-ம் வருஷம் அக்டோபர் மாதம் 2-ந் தேதியில் பிறந்தார். இவர் தகப்பனார் கரம் சந்த்ரர் என்னும் பெயருடையவராதலாலும், இவரது வம்சத்திற்கு காந்தி என்கிற பெயராதலாலும் இவருடைய பெயராகிய மோகனதாஸர் என்பதோடு சேர்க்கப்பட்டு இவர் பெயர் மோகனதாஸ் கரம்சந்த்ர காந்தி என்று ஆயிற்று. இவரை நாம் மோகனதாஸர் என்றே கூப்பிடுவோம். மோகனதாஸரின் முன்னோர்கள் உன்னத ஸ்திதியிலிருந்தவர்கள். மோகனதாஸரின் பாட்டனார் உத்தம சந்திரர் கத்தியவார் மகாணத்தைச் சேர்ந்த போர்பந்தர் என்னும் சுதேச ராஜாங்கத்து மந்திரியாயிருந்தார். போர்பந்தரில் அப்பொழுது விக்கிரமஜித் என்னும் அரசனுக்கு ரீஜண்டாக இருந்த ராணிக்கும் இவருக்கும் விவாதம்வர உத்தம சந்திரர் ஜுனகாட் நவாபிடம் போய் விட்டார். நவாப் இவரை மிகவும் பிரியத்துடன் வரவழைத்தார். அவருக்கு உத்தம சந்திரர் வலது கையால் வந்தனம் செய்வதற்கு பதிலாக இடது கையால் செய்தார். அப்படிச்செய்வது ஒரு பெரிய குற்றமாக அத்தேசத்தில் கருதப்பட்டது. நவாப் இவரை ஏன் இடது கையால் வந்தனம் செய்தீர்? என்று கேட்க, இவர் "என்ன கஷ்ட நிலைமையிலிருந்தாலும் போர்பந்தரின் கைங்கரியத்திற்காக நான் வலக்கையை அர்ப்பணம் செய்துவிட்டபடியால் உமக்கு வந்தனம் செய்ய இடது கையைத் தவிர வேறொருகையும் இல்லை" என்று தைரியமாகச் சொன்னார். நவாப் இந்தப் பதிலினால் சந்தோஷப் பட்டவராய் உத்தம சந்திரரை மன்னித்துவிட்டார்.

உத்தம சந்திரரின் புத்திரரான மோகனதாஸின் தகப்பனாராகிய கரம் சந்த்ரர் போர்பந்தரில் 25-வருஷகாலம் மந்திரித்துவம் வகித்துவந்தார். தகப்பனார் மந்திரித்துவம் வகிக்கும் பொழுதுதான் நமது கதாநாயகர் பிறந்தது. மோகனதாஸருக்கு ஏழுவயதாகும்பொழுது ராஜகோட்டைக்குப்போகும்படி நேர்ந்தது. பிறகு அங்கேயே ராஜகோட்டை தாகூரிடம் திவானாக அமர்ந்தார். அந்தக் காலத்தில் தாகூர் சாகிப் ஒரு தடவை இவருக்கு சொல்ப பூஸ்திதியை சன்மானமாக அளிக்க இவர் அதை லஞ்சமெனக் கருதி மறுத்து விட்டாராம். தாகூர் பிடிவாதம் பிடித்தார். பந்துக்களும் நிர்ப்பந்தித்தார்கள். பந்துக்கள் நிர்ப்பந்திக்க ஒரு சிறு பாகத்தை அங்கீகரித்தார். ஒவ்வொரு சுதேச ராஜாங்கத்திலும் பிரிட்டிஷ் அதிகாரி ஒருவர் இருப்பதுண்டு. அவ்வதிகாரிகளுக்கு அத்தேசத்தில் மிகுந்த செல்வாக்குண்டு. அப்படியே ராஜகோட்டையில் இவ்வதிகாரியின் இஷ்டப்படியே எல்லாம் நடந்து வந்தது. திவானைத் தள்ளுவதும் நியமிப்பதும் இவர் இஷ்டம் தான். தாகூருக்கு அதிக சுதந்திரம் கிடையாது. இப்பேர்ப்பட்ட ஸ்திதியில் இருக்கையில் பிரிட்டிஷ் அதிகாரி தன் அரசனை

அவமதித்ததாக அவ்வதிகாரியோடு தைரியமாக வாதித்தார். அவ்வதிகாரிக்கு கோபம் வந்து இவரை மன்னிப்புக்கேட்டுக்கொள்ளச் சொன்னார். இவர் சம்மதிக்கவில்லை. உடனே அந்த அதிகாரி இவரைக்கைதிசெய்து சொல்ப தண்டனை விதித்தார். அவர் அத்தண்டனைக் குட்பட்டாரே ஒழிய மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவில்லை. பிறகு சில தினங்களுக்குள் பிரிட்டிஷ் அதிகாரியும் இவரும் சிநேகிதர்களாய் விட்டார்கள். இதனால் இவர் வைராக்கிய சித்தரென்பது வெளியாயிற்று.

பாலியப்பருவம்.

இப்பேர்ப்பட்ட உத்தமமான சந்ததியிற் பிறந்த நமது மோகனதாஸர் தமது ஏழாவது வயது வரையும் போர்பந்தரிலேயே படித்தார். பிறகு நாம் முன் சொன்னபடி அவர் ஏழாவது வயதில் குடும்பத்துடன் ராஜகோட்டைக்குப் போகும்படி நேரிட்டது. அங்கு சுதேச பாஷா பாடசாலையில் 10-வயது வரையில் படித்துப் பிறகு கத்தியாவாரிலுள்ள ஹைஸ்கூலில் சேர்ந்தார். அங்கு நன்றாகப் படித்து 17-வது வயதில் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறினார். இங்கு இவர் தாயாரைப்பற்றி சிறிது சொல்வோம். மோகனதாஸரின் தாயார் சிறந்த புத்தி கூர்மையும் தர்ம சிந்தையும் உடைய ஒரு ஸ்திரீரத்தினம். அந்த அம்மையின் வாழ்க்கையே சிறந்த வாழ்க்கை. அவ்வம்மை வசிக்கும் வீட்டில் அஷ்டலக்ஷ்மிகளும் குடிபுகுந்து ஆநந்தத்தால் பூரிக்கச்செய்வார்கள். இந்தத் தாயாருடைய அன்பே மோகன தாஸரை தீயவழிகளில் செல்லவிடாமல் தடை செய்யப் பெருந்தூண்டுதலாக இருந்தது. தாம் செய்யும்படி நேரும் ஒவ்வொரு காரியத்திற்கும் சூட்சுமமான காரணங்களைத் தெரிந்துக்கொள்ள ஆவல் கொள்வார். மத விஷயங்களைப் பற்றியும் வீட்டிற்குள் ஆசார சம்மந்த மென்ற பெயரைக் கொண்டு நடக்கும் ஒவ்வொரு விஷயங்களைப் பற்றியும் அதி சூக்ஷ்மமான கேள்விகள் கேட்பார்.

ஸத்ய விரதம்.

இவைகளுக்கு அவர் தாயார் திருப்திகரமாய் பதில் சொல்வார்கள். ஆனால் வீடுகளில் சாஸ்திர சம்மதமென்ற பெயருடன் நடக்கும் சில அனுஷ்டானங்களைப் பற்றி திருப்திகரமான பதில் கிடைக்கவில்லை! இதனாலும் இன்னும் பல காரணங்களாலும் நாளடைவில் ஈசுவர நம்பிக்கையற்றவராகி விட்டார். இதிலிருந்து சகவாஸ தோஷத்தால் தீயவழிகளில் புத்தி செல்ல வாரம்பித்து சிலைபெறாமல் தடுமாறிற்று. மதத்தில் நம்பிக்கையில்லா விட்டாலும் 'பொய் சொல்லுகிறதில்லை என்கிற சத்திய விரதம் பூண்டவராதலால் தீய வழக்கங்களைத் தவிர்த்தார். இவருக்கு 12-வது வயதிலே கலியாணம் ஆயிற்று. மோகனதாஸர் பாலிய விவாகத்திற்கு விரோதமாயிருந்த போதிலும் இவர் விஷயத்தில் பாலிய விவாகம் நன்மையையே செய்தது. இவருக்கு 17-வது வயதில் மெட்ரிகுலேஷன் பரிக்ஷை தேறினதும் சீமைக்குப் போய் பாரிஸ்டர் பரிக்ஷைக்குப் படிக்க சிலர் தூண்டுதலினால் விரும்பினார்.

சீமைப்படிப்பு.

மோகனதாஸரின் தாயார் இங்கிலாந்துக்குப் போன வாலிபர்கள் துன்மார்க்கத்தில் பிரவேசித்து அழிந்துபோவதைக் கேள்விப்பட்டிருந்தபடியால் மோகனதாஸரை இங்கிலாந்துக்கு அனுப்ப சம்மதிக்கவில்லை. ஆனால் மோகனதாஸர் பிடிவாதம் பிடித்ததால் தாயார், "நான் இங்கிலாந்தில் இருக்கும்பொழுது மாம்ஸபோஜனம், சுராபானம், ஸ்திரீசகவாசம் ஆகிய இவைகள் மூன்றையும் விலக்குவே" னென்று, மோகனதாஸரை பெரியவரான ஒரு ஸந்நியாசி முன்பாக அழைத்துப்போய் தெய்வ சாக்ஷியாக சத்தியம் செய்யச் சொல்லி பிறகு அனுமதிகொடுத்தார். இவர் இங்கிலாந்திற்

குப் போவதில் சம்மத மில்லாதவர்கள் இவரை ஜாதிப்பிரஷ்டம் செய்வதாக பய முறுத்தியும் மோகனதாஸர் 1888-ம் வருஷம் ஸெப்டம்பர் மாதம் லண்டனில் இறங்கினர். அங்கு இங்கிலீஷ் நடையுடை ஆசாரம்தெரிந்த ஒரு இந்திய கனவான் பழக்கமானுர். அந்த கனவான் இவரையும் ஒரு ஆங்கிலகனவானுக் கக் கருதி விலையுயர்ந்த உடைகளை இவருக்கு வாங்கிக் கொடுத்தார். இவ்வுடைகளிலேயே இவர்கொண்டுவந்த பணங்கள் எல்லாம் செல வழிந்துவிட்டது. ஆனல் மாம்ச போஜ னத்தை மாத்திரம் தனது சிநேகித கனவான் என்ன சொல்லியும் தவிர்த்தார். இது அக் கனவானுக்குப் பிடிக்கவில்லை.

இப்படியிருக்க இவ்விருவர்களும் ஒரு இங்கி லீஷ் விருந்துக்கு போனுர்கள். அங்கு மாம் ஸம் கலந்தவைகள் சாப்பாட்டிற்காகக் கொ ண்டுவந்து வைக்கப்பட்டன. மோகனதாஸர் அப்பதார்த்தத்தில் மாம்சம் கலந்திருக்கிறதா என்று விசாரிக்க, இவரைக் ஆங்கிலகன வானகப் பழக்கப்படுத்த வேண்டுமென்று எண்ணங்கொண்ட இவர் நண்பர் "உனக்கு மரியாதையாய் நடந்துக்கொள்ளத் தெரியா விட்டால் புறப்பட்டுப் போகலா" மென்றுர். உடனே மோகனதாஸர் எழுந்துபோய் டம்ப உடைகளை எல்லாம் எறிந்துவிட்டு சன்மார்க்க வழியில் வசித்தார். அங்கு பாரிஸ்டர் பரிக்ஷை யில் தேறி சுதேசத்திற்குத் திரும்பினர்.

தாயை யிழக்கும் தெளர்ப்பாக்கியம்

அதற்குள் தாயை யிழக்கும் தெளர்ப் பாக்கி யம் பெற்றுர். சுதேசம் வந்ததும் வக்கீல் வேலையில் அமர்ந்தார். இந்தியாவிற்கு வந்தது முதல் பதினெட்டு மாதங்கள் சட்ட புஸ்தகங் களை வாசிப்பதிலும், ஹிந்துமத சம்பந்தமான சாஸ்திரங்களைப் படிப்பதிலும் செலவழித்தார். இதற்குள் போர்பந்தரில் இருந்த ஒரு வியா பார கம்பெனிக்கு அதன் கிளையாகிய பிரிட் டோரியாவில் ஒரு வருஷத்துக்கு நீடிக்கத் தக்கதான வியாஜ்யம் இருந்தது. மோகன தாஸர் பாரிஸ்டராகையால் அவ்வியாஜ்யத்திற்கு வக்கீலாக நியமிக்கப்பட்டார்.

தென்னபிரிகாவுக்குப் போதல்.

அவர் இங்கிருந்து போகும் வழியிலும் நேடாலிலும் ஏற்பட்ட கஷ்டங்கள் இவ்வளவு அவ்வளவு அல்ல. இவர் ரயில்வண்டியில் முதல் வகுப்பு டிக்கெட் வாங்கிக்கொண்டு அந்த வகுப்பில் உட்கார்ந்து கொண்டிருக் கையில் ஒரு ரயில் உத்தியோகஸ்தன் இவரை மூன்றுவது வகுப்பில் உட்காரச் சொன்ன தாகவும் அதற்கு இவர் மறுக்கவே இவரை யும் இவர் மூட்டைகளையும் பிடித்து வெளி யில் தள்ளிவிட்டு ரயில்வண்டியை விட்டு விட்ட தாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இவர் ஒரு வருஷத்திற்கு வியாஜ்யமாடுவதாக உடன் படிக்கை எழுதிகொடுத்திராவிட்டால் உடனே இந்தியாவுக்கு கட்டாயம் திரும்பி இருப்பார். மோகனதாஸர் ஒரு வருஷத்திற்குள் கேசை ஜெயித்துமுடித்து விட்டு இந்தியாவுக்குத் திரும்பலானுர்.

தோட்ட விருந்து.

இவர் திரும்புகையில் இவருடைய கக்ஷிக் காரர்கள் ஒரு தோட்ட விருந்து வைத் தார்கள், அத்தோட்ட விருந்துக்குப் போயி ருந்த மிஸ்டர் காந்தி அங்கு வந்திருந்த ஒரு பத்திரிகையில் இந்தியர்களுக்கு ரித்தான 'வோட்டு'க் கொடுக்கும் சுதந்திரம் முதலிய வைகளை நீக்குவதற்கான பல சட்டங்கள் ஏற் படும் என்று போட்டிருந்ததைப் பார்த்தார். இவைகளை அவர் அங்கு கூடியிருந்த இந்தியர் களுக்குக் காண்பிக்க இதுவரை தூங்கிவந்த அவர்கள் கண் விழித்து இந்தியாவின் கௌ ரவத்தைப் பாதுகாக்கப் பாடுபட ஆரம்பித் தார்கள். அன்றே தென் ஆபிரிக்கா இந்தியர் கள் எல்லாம் ஒன்று சேர்ந்து கவர்ன்மெண் டுக்குத் தந்தி கொடுத்தார்கள். தந்தியோடு கூட ஏராளமான கையெழுத்துக்களுடன் ஒரு மஹஜரும் அனுப்பப்பட்டது.

லார்ட் ரிப்பன் செய்த உபகாரம்.

இவைகளினால் காரியாம்சத்தில் பலனில்லாவிட்டாலும் சட்டத்தில் சொல்பமாறுதல்கள் உண்டாயின. இந்தச் சட்டம் தென் ஆபிரிக்கா கவர்ன்மெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்டால் மாத்திரம் போராது. இங்கிலாந்துக்குப் போய் ராஜசம்மதம் பெறல்வேண்டும். ராஜசம்மதம் பெற்றால் மாத்திரமே தேச சட்டமாகும். இம்மசோதா சீமைபோய்ச் சேருவதற்குள் பதினாயிரம் கையெழுத்துக்களடங்கிய இன்னொரு மஹஜர் இங்கிலாந்திலுள்ள கலனியல் செக்ரிடெரிக்கு அனுப்பப்பட்டது. லார்ட் ரிப்பன் அப்பொழுது கலனியில் செக்ரிடெரியாக விருந்தார். அதன் பலனாக இம்மசோதா ராஜசம்மதம் பெறவில்லை. இது இந்தியர்களுக்கு தைரியத்தைக் கொடுத்தது. ஆனால் காரியத்தில் ஒன்றும் பலனில்லை. தென் ஆபிரிக்கா கவர்மெண்டார் இன்னொரு சட்டத்தின் மூலமாக தங்கள் காரியத்தை நிறைவேற்றிக்கொண்டார்கள்.

நிரந்தர வாஸம்.

இதைக்கண்ட காந்தி இந்தியர்களுடைய பந்தோபஸ்துக்காக முழு கவனத்தையும் செலுத்தும் ஒரு சங்கத்தின் அவசியத்தை எடுத்துக்காட்டினார். அதற்கு இந்தியர்கள் அவர் இல்லாமல் தங்களால் ஒன்றும் செய்ய முடியாதென்றும் அதற்காக அவர் அவர்களோடேயே தங்கி யிருக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள். காந்தி சம்மதித்தார். பிறகு தென் ஆபிரிக்கா இந்தியர்களுக்காக வேலை செய்வது என்று ஏற்பட்டதும் நேடாலிலேயே காந்தி தமது பெயரை பாரிஸ்டராகப் பதிவுசெய்து கொண்டார். அது முதல் இரண்டு வருஷகாலம் அத்தேசத்திலேயே பலவிதமான கஷ்டங்களை எல்லாம் தாங்கி நின்று வேலைசெய்தார். பிறகு 1896-ம் வருஷம் தனது குடும்பத்தை அழைத்துக்கொண்டு வர இந்தியாவிற்குப் புறப்பட்டார். இந்தியாவிற்குப் புறப்படுகையில் தென் ஆபிரிக்கா இந்தியர்கள் படும் கஷ்டங்களைத் துண்டுப் பத்திரிகைகளாக அச்சடித்து பகிரங்கப் படுத்தினார்.

இந்தியாவிற்கு வந்தபிறகு ஜனங்களிஷ்டப்படி தென் ஆபிரிகா இந்தியர்களின் கஷ்டங்களைப்பற்றி உபந்யாசங்கள் செய்தார். தனது ஜன்மபூமியில் இவர் செய்த உபந்யாசங்களைக் கொண்டாடாதவர்களே இல்லை. ராய்டர் ஏஜண்டுகள் காந்தியின் உபந்யாஸத்தை தென் ஆபிரிக்கா பேபர்களுக்குத் தெரிவிக்கும்பொழுது தாறுமாறாகத் தெரிவித்துவிட்டார்கள். அதை தென் ஆபிரிகா வெள்ளையர்கள் பார்த்துக் கோபங்கொண்டு காந்தியை தென் ஆபிரிகாவிற்குள் வரவிடுகிறது இல்லை என்று தீர்மானித்ததல்லாமல் அவரை நிந்தித்தார்கள். இப்படி இருக்கையில் காந்தியை உடனே புறப்பட்டுவரும்படி தென் ஆபிரிகா இந்தியர்கள் தந்தி அடித்தார்கள்.

டர்பனில் கலகம்.

மோகனதாஸ் காந்தி டர்பன் துறைமுகம் சேர்ந்த அன்றே 600 இந்தியர்கள் அடங்கிய இன்னொரு கப்பலும் வந்து சேர்ந்தது. இவ்விரண்டு கப்பல்களும் துறைமுகத்திலேயே வியாதியொன்று மில்லாவிட்டாலும் வியாதிக்கப்பலாக ஒதுக்கிவைக்கப்பட்டன. வெள்ளையர்கள் கூட்டம் கூடி இந்தியர்களைக் கரையில் இறங்கவிடுகிறதில்லை என்று தீர்மானித்தார்கள். காந்தி கரையில் இறங்கும்நாளில் ஜனங்கள் கோபாவேசராய் கூட்டம் கூடியிருந்தார்கள். நேடால் அதிகாரி அவர்களுக்கு நயவசனங்களைச் சொல்லி அனுப்பிவிட்டார். பிறகு காந்தி கரையில் இறங்கினார். இறங்கி தனது குடும்பத்தாரை ஒரு சிநேகிதன் வீட்டுக்கு அனுப்பினார். பிறகு ஒரு வெள்ளையரோடு அவர் போகையில் அவரைத் தெரிந்துகொண்டு ஜனங்கள் அவரை அடிக்க ஆரம்பித்தார்கள்.

காந்தி முதலில் ஒரு சிநேகிதர் வீட்டிலும், பிறகு போலீஸ் சேவகன் உடுப்பு தரித்து

போலீஸ் டாணுவிலும் அடைக்கலம் புகுந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் கூட்டம் கலைந்தது பிறகு காந்தி அமரிக்கையாக இந்தியர்களுக்காக வேலை செய்யத் தொடங்கினர்.

யுத்தத்தில் உதவி.

1899ம் வருஷம் போவர் யுத்தம் நடைபெற்றது. இந்தியர்கள் அதில் ஒத்தாசை செய்ய விரும்பினர்கள். முதலில் வெள்ளையர்களால் வெறுக்கப்பட்டு ஒதுக்கப்பட்டார்கள். ஆனல் வெள்ளையர்கள் கைதளர்ந்த பொழுது இந்தியர்களின் ஒத்தாசை யாவும் வேண்டியிருந்தது. போவர் யுத்தத்தில் வெகு இந்தியர்கள் வெள்ளையர்களுக்காக இறந்தார்கள். யுத்தம் முடிந்தது. டிரான்ஸ்வால், பிரிடிஷ் ராஜாங்கமாயிற்று. யுத்தத்திற்குப் பிறகு இந்தியர்கள் கஷ்டம் நீங்குமென்று எதிர்பார்த்திருந்ததுபோய் ஜாஸ்தியாயிற்று. பிரிட்டிஷ் அதிகாரிகள் ஆசியா தேசத்தவரைப்பற்றி கவனிக்கப் புது இலாகா உண்டாக்கினர்கள். சட்டங்களை பலமாக அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். காந்தியின் பெயர் உத்யோகஸ்தர்களுக்கு விஷமாயிருந்தது. அவரைப்பார்க்க மறுத்தார்கள். காந்தி இவைகளுக்கு பயப்படுகிறதில்லை. பிரிடோரியாவில் பாரிஸ்டராக பேரைப் பதிவுசெய்துகொண்டு நியாயஸ்தலத்தில் வாதித்தார்.

பத்திரிகை யாரம்பித்தல்.

1903-ம் வருஷம் "இந்தியர் அபிப்பிராயம்" என்னும் பத்திரிகையை ஆரம்பித்தார். இந்தியர்கள் கல்விப்பயிற்சி குறைந்தவர்களாதலால் முதலில் நஷ்டமே உண்டாயிற்று. காந்தி பண நஷ்டத்தை கவனியாதவராய் காரியபலனைக் குறித்து அதை நடத்தினர். அதனல் 2,000 பவுன் அதாவது 30,000 ரூபாய் நஷ்டம் வந்தது. அதை காந்தி பாராட்டவில்லை. இப்படியிருக்கையில் 1904-ம் வருஷம் ஜோஹன்ஸ்பர்க் என்னும் பட்டணத்திலுள்ள இந்தியர்களுக்குள் 'பிளேக்' என்னும் கொடிய வியாதி பரவிற்று. அதிகாரிகள் அதை கவனிக்காமலோ, இல்லாவிட்டால் வேண்டுமென்றோ சும்மா இருந்து விட்டார்கள். காந்தி தனது சிநேகிதர்களோடு பிளேக்நோயால் பீடிக்கப்பட்டவர்களுக்கு ஒத்தாசைசெய்து பிளேக்கின் கொடுமையைத் தணித்தார். பிளேக் தணிந்த பிறகு காந்தி 'பீனிக்ஸ்' என்னும் ஏராளமான நிலத்தை வாங்கி அந்த இடத்தில் குடியேறி அங்கே பயிர் செய்து வாழ்ந்து வந்தார்கள். நாளது வரை 'இந்திய அபிப்பிராய' பத்திரிகையும் இவ்விடத்திலேயே தான் நடைபெற்று வருகிறது.

பிரிட்டிஷ் கமிட்டி.

1906-ம் வருஷம் பிரிடிஷ்கமிட்டி ஜுலு கூட்டத்தார் கலகம் செய்த பொழுது காந்தி 20 இந்தியர்களின் ஒத்தாசையைக்கொண்டு காயம் பட்டவர்களுக்கு சிகித்சை செய்தார். இப்படி இருக்கையில் டிரான்வால் கவர்ன்மெண்டார் கொடுமையான சட்டங்களை அமுலுக்கு கொண்டுவந்து கொண்டிருந்தார்கள். 1906-ம் வருஷத்தில் திடீரென்று ஒவ்வொரு இந்தியர்களும் கட்டைவிரல் அடையாளம்செய்து கைதிகளைப் போல தங்கள் பேரைப் பதிவுசெய்து கொள்ள வேண்டுமென்று மசோதா கொண்டுவந்தார்கள். இந்தியர்கள் உடனே கூட்டம் கூடி காந்தியையும் மிஸ்டர் ஆலியையும் பிரதிநிதிகளாக இங்கிலாந்திற்கு அனுப்பிவைத்து ராஜசம்மதம் கொடுக்கப்படாதிருப்பதற்கான வழிகளைச்செய்ய அனுப்பினர்கள். அப்படியே ராஜசம்மதம் கொடுக்கப்படவில்லை. சென்னை கவர்னராயிருந்த சகல நற்குணங்களும் பொருந்தியுள்ள லார்ட் ஆம்ப்தில் பிரபுவை தலைமையாகக்கொண்டு இந்தியர்களின் சுதந்திரங்களைப் பாதுகாக்க இங்கிலாந்தில் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. ஆனாலும் திரான்ஸ்வாலில் பார்லிமெண்டு கூடினதும் இம்மசோதாவுக்கு ராஜசம்மதம் கிடைத்து அது சட்டமாயிற்று. இந்தியர்கள் இச்சட்

டத்திற்கு கீழ்ப்படிகிறதில்லை என்பதை அமுலுக்குத் கொண்டுவந்தார்கள். சிறைச்சாலைகளெல்லாம் இந்தியர்களால் நிரம்பப்பட்டிருந்தது. இதைப்பார்த்த ஜெனரல் ஸ்மட்ஸ் என்பவர் இந்தியர்கள் வலுவில் தங்கள் பெயரைப் பதிவு செய்வதாயிருந்தால் அச்சட்டத்தை எடுத்துவிடுவதாகச் சொன்னார். அதை காந்தி ஒப்புக்கொண்டு தன் பேரை முதலில் பதிவுசெய்துகொண்டார். இதைப் பார்த்த ஒரு பட்டாணி காந்தி நம்பிக்கைத் துரோகம் செய்வதாய் நினைத்து அவரை அடித்துவிட்டான்.

### அக்கிரம விக்கிரமங்கள்.

ஆனால் ஜெனரல் ஸ்மட்ஸ் தான் சொன்ன வார்த்தை பிசகினர். அடுத்த வருஷம் இக்கொடிய சட்டம் எடுக்கப்படவில்லை. மறுபடியும் இஷ்ட விரோத வைராக்கிய முஷ்டியுத்தம் (Passive Resistance) ஆரம்பித்தது. ஆயிரக்கணக்காக இந்தியர்கள் சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டார்கள். அவர்களில் காந்தி 2 மாஸம் சிறைவாஸம் செய்யவேண்டியிருந்தது. இஷ்டவிரோத வைராக்கியம் இன்னும் நடந்து கொண்டிருக்கிறது. இப்பொழுது தென் ஆபிரிக்கா இந்தியர்கள் ஆண் பெண் எல்லோரும் தலைக்கு 3 பவுன் (45 ரூபாய்) வரிதர வேண்டுமென்று சட்டமேற்படுத்தியிருக்கிறார்கள். அக்னி சாக்ஷியாக மணம்செய்யப்பட்ட மனைவிக்குரிய சுதந்திரங்களை இந்திய ஸ்திரீகளிடமிருந்து பிடுங்கிவிட்டார்கள். மணம் செய்யப்பட்ட ஸ்திரீ மனைவி அல்ல: ஆனல் வெள்ளையர்கள் நியாயஸ்தலப்படி மணம் செய்யப்பட்டவனின் வைப்பாட்டியாம். என்னே! அநியாயம்! இந்தக் கஷ்டம் எப்போது நிவர்த்தியாகுமோ. இந்தியாவின் கண்ணியத்தைக் காப்பாற்றுவதற்காகவே மற்ற தேசத்தாரை ஒப்ப இந்தியர்களுக்குச் சுதந்திரம் கிடைக்க ஏற்பட்டுள்ள இப்பெருத்த கஷ்டத்தில் பல்லாயிரக் கணக்காக நம் சகோதரர்கள், வீடுவாசல், தொழில், ஆஸ்தி பாஸ்தி, பெண், பிள்ளை யாவையும் துறந்து சிறையில் வெள்ளையர்களால் துன்புற்று உண்மையறியவும், ஸாஹஸம்செய்து நூற்றுக் கணக்கினல் உயிர் துறக்கவும் தீர்மானத்திருக்கிறார்கள். இவர்களுக்கு நம்மாலானவரை பொருளுதவி செய்து இந்தியாவின் பெருமை குறையாமல் காப்பது ஒவ்வொரு இந்தியருடைய கடமையாகும்.

### அரசர் பிரதிநிதி அனுதாபம்.

நம் அரசர் பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்சவர்கள் இது விஷயத்தில் முற்றும் இந்தியர்கள் பக்ஷமாகவேயிருப்பது நமக்கு ஆறுதலைக் கொடுத்தாலும், நாம் செய்முயற்சியைத் தளரவிடக்கூடாது. மிஸ்டர் காந்தி சிறையிலிருந்து விடுபட்டும் ஒருவேளை அன்னம் புசித்து இந்த அநியாயம் தீரவேண்டுமென்று நித்யோபவாஸம் இருந்துவருகிறார். ஏழைபங்காளியாகிய பகவான் கிருபையிருந்தால் எல்லாம் இனிது முடியும்.

## H E. THE VICEROY'S UTTERANCE.

" Recently your compatriots in South Africa have taken matters into their own hands by organising what is called passive resistance to laws which they consider invidious and unjust, an opinion which we who watch their struggles from afar cannot but share. They have violated, as they intend to violate, those laws with full knowledge of the penalties involved, and are ready with all courage and patience to endure those penalties. In all this they have the sympathy of India deep and burning—and not only of India, but of all those who like myself, without being Indians themselves, have feelings of sympathy for the people of this country."—*Lord Hardinge at Madras.*

## "THANK GOD TAKE COURAGE."

Refering to the Viceroy's utterance in Madras regarding what is called "passive resistance" "the Commonweal" remarks as follows :—" These words are words of guidance for the future, as well as of judgment of the present. For here we have laid down for us authoritatively the principle that righteousness is not violated when a citizen deliberately sets himself against a law which he feels to be unjust, provided that, knowing the penalties he is "ready with all courage and patience to endure those penalties." That is the doctrine held by martyrs, heroes and patriots, who have, by suffering, changed evil laws and brought about great reforms. But to have it publicly declared by a Ruler and that the Ruler of India, is a thing for which all true men may "thank God and take courage."

" Many unjust laws allow bold knaves to exist in high places and acquire great influence with which they dazzle the eyes of the people."—C. E. Smith (copy-book maxim)

" Suffering is intended to make man think."

" Beware ! when the great God lets loose a thinker on earth."—*Emerson.*

## THE VICEROY ON THE PRINCIPLE OF PASSIVE RESISTANCE OR SOUL-FORCE.

## கர்மதர்ம நியாயத்தைப்பற்றி அரசர் பிரதிநிதியவர்கள் அபிப்பிராயம்.

அரசர்பிரதி லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் சென்னைக்கு விஜயமாயிருந்த பொழுது தென்னாபிரிகாவில் இந்தியர்கள் இஷ்டவிரோத வைராக்கிய முஷ்டி ஸாஹஸம் செய்வதைப் பற்றித் தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்துப் பேசினார். அவர் சொன்னதாவது:—

தென்னாபிரிகாவில் உங்கள் தேசத்தார் தங்கள் குறையைத் தீர்த்துக்கொள்ள தாங்களே முயற்சிசெய்யத்தொடங்கி இஷ்டவிரோதவைராக்கிய முஷ்டி ஸாஹஸம்செய்யத்தலைப்பட்டு விட்டார்கள். பக்ஷபாதகமாயும் தர்மவிரோதமாயுமுள்ளதென்று அவர்களுக்குப்படும் சட்டத்துக்கு உடன்படாமல் இஷ்டவிரோதம் செய்து வருவதை தூரத்திலிருந்து பார்க்கும் நாம் சரியென்று ஒப்புக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது. அப்படியுள்ள அக்கிரம சட்டங்களுக்கு விரோதமாக நடக்க வேண்டுமென்கிற சங்கல்பம் செய்து கொண்டு அதனால் வரும் தண்டனைக்குமுட்பட வேண்டுமென்கிற வைராக்கிய சித்தத்தோடு சட்டவிரோதம் செய்து வருகிறார்கள். சட்ட விரோதம் செய்வதால் வரும் தண்டனைக்கு மனமுவந்து உட்பட்டுவருகிறார்கள். இதில் அவர்கள் காட்டும் வைராக்கியசித்தமும் பொறுமையும் மெச்சத்தக்கதாயிருக்கிறது. அவர்கள் இப்படி யெல்லாம் செய்வது இந்தியாவிலுள்ள எல்லாருக்கும் அவர்களிடத்தில் அனுதாபம் உண்டாகச்செய்கிறது. அந்த அனுதாபமும் உள்ளத்திருந்துண்டாய் சுடர்விட்டெரிவதாயிருக்கிறது. இந்தியர்கள் மட்டுமல்ல, என்னைப்போல் இந்தியராயில்லாவிட்டாலும் இந்தியாசேத்து ஜனங்களிடத்தில் அனுதாபமுள்ளவர்களுடைய உண்மையான உள்ளனுதாபத்துக்கும் அவர்கள் பாத்திரர்களாகிறார்கள்.

இப்படி அரசர் பிரதிநிதியவர்கள் சொன்னதின் அர்த்தமென்னவென்று பார்க்கும் பொழுது தர்மஸ்வபாவம் இன்னதென்பதை அவர் தாமே யெடுத்துக்காட்டினது போலாகிறதென்று மிஸ்ஸஸ் பெஸண்ட் பிரசுரித்து வரும் "காமன்வீல்" அதாவது "பொதுநலம்" என்னும் பத்திரிகையில் எடுத்துக் கூறுகிறார். எல்லா சட்டங்களும் மனச்சாக்ஷி யென்று சொல்கிற கூடஸ்தன் சம்மதியினாலேயே தர்ம ஸ்வபாவமுள்ளவையாகின்றன. தர்ம ஸ்வபாவம் என்றால் என்ன? தர்மம் என்பது கர்மத்தினுடைய இயல்பு.இது தானாக இயன்று ஜடாத்மகமான எல்லாவற்றையும் இயற்றுவிக்கும் தன்மையது. கர்மம் என்பது பீஜாங்குர நியாயம் போல் (வித்திலிருந்து மரமும் மரத்திலிருந்து வித்தும் உண்டாகிற நியாயம் போல்) பலனைக் கொடுத்துக் கொண்டே வளரும். கர்மபலன் உள்ள வரையில் கர்மபந்தமும் உண்டு. ஏனெனில் விதைவிதைத்தவன் பலனை அறுக்கவேண்டும். இந்தக் கர்மபந்தத்தை வெல்ல ஒருவழியுண்டு. அது தான் ஆத்மஞானம். ஆத்மன் செயலற்றவன், பூர்ணன், எங்கும் நிறைந்தவன் என்கிற ஸ்வானுபவம் உதிக்குங்காலையில் கர்மத்தினுடைய மர்மம் தெரியும். கர்மத்தினுடைய மர்மம் தெரிந்தால் கர்மதர்மம் தானேவிளங்கும். சட்டவிரோதம் எப்போதும் தர்ம விரோதமாகாது. தர்ம விரோதமான சட்டத்துக் குடன்பட்டு நடப்பதே கர்ம

விரோதமாகும். இந்த ரஹஸியத்தையுணர்வது கஷ்டம்; அதுவும் உணர்ந்தபடி நடப்பது அதிலும் கஷ்டம். கர்மபலனை விட்டு தர்மம் தழைக்க வென்றே காரியத்தைச் செய்து வந்தால் கர்மஸந்யாஸயோகத்தால் நைஷ்கர்மஸித்தி லபிக்கும். நைஷ்கர்மஸித்தியொன்று தானே ஸர்வஸித்தியையும் கொடுக்கும். இது ஆத்மபுத்தியுடையவர்களுக்கே விளங்கும். மனிதர் செய்யும் கொடுமையான சட்டங்களை மாற்ற சாமானியரால் முடியாது. ஆனால் ஆத்மபுத்தியும் நைஷ்கர்மசித்தியும் வாய்த்தவர்கள் அச்சட்டங்களால் வரும் கெடுதிகளை அனுபவித்துக்காட்டி தங்கள் பொறுமையினாலும் புத்தி சாதுர்யத்தினாலும் அதை மாற்றச்செய்யலாம், செய்திருக்கிறார்கள். உயிர் போனாலும் உண்மைதவறாத உத்தமர்கள் ஸத்யசந்தர்களாய் நியாயத்தை நிலை நிறுத்தும் பொருட்டு மற்றவர்களால் பொறுக்கமுடியாத கஷ்டங்களைப் பொறுத்தனுபவித்துக் காட்டுவதாலேயே கெட்டசட்டங்களால் அக்கிரமஸ்தர்கள் அதிகாரத்திலிருப்பதின் கொடுமையை நீக்கியிருக்கிறார்கள். விசுவாமித்திரர் காலம் முதற்கொண்டு முனிபுங்கவர் தாம் ஒருவராக நின்றுஉலகநடத்தையைமாற்றியிருக்கிறார்கள்.

---

**LEELA SUNDARI-HER FORTUNE.**
**CHAPTER. III.**

## லீலா சுந்தரி-அவள் பாக்கியம்.

அத்தியாயம். 3.

அன்று சாயங்கல முழுவதும் லீலா,—"நான் ஜமீன்தாரணி! அப்பா! கோடீசுவரி!" என்று முணு முணுத்துக் கொண்டிருந்தாள்.

சத்தியநாயகம் பிள்ளை பொழுது சாய்வதைக் கண்டு, லீலாவைப் பின்வருமாறு கேட்டார்:

சத்தியநாயகம் பிள்ளை:—"அம்மா லீலா, நீ இனிமேல் என்ன செய்யப்போகிறாய்? இனி நீ இங்கிருப்பது சரியில்லை."

லீலா:—"வசந்தமாளிகை இப்பொழுது நாம் போய் குடியிருப்பதற்கு யோக்கியமாயிருக்கின்றதா?"

சத்தியநாயகம் பிள்ளை:—"வேலைக்காரர்கள் அதை சரியாகப் பார்த்து வருகிறார்கள். இன்று ராத்திரியே அங்கு போய் தங்கலாம்."

லீலா:—"அப்படியா! நான் உடனே அங்கு போகலாமானால், சீக்கிரம் போக விரும்புகிறேன்."

சத்தியநாயகம் பிள்ளை:-"போகலாமானலா? நமது சக்கிரவர்த்தி கூட உம்மை "அங்கு போகக் கூடாது" என்று சொல்லமுடியாது.

லீலா:—"அப்படியானால் நாளைக்கே போவோம்."

சத்தியநாயகம்பிள்ளை:—"உங்களுக்கு ஸ்த்ரீ ஸஹாயம் வேண்டாமா? அதற்கு யாராவது வேண்டும்."

லீலா:—"நான் நாகம்மாளை அழைத்துக் கொண்டு போகிறேன்."

சத்தியநாயகம் பிள்ளை:—"உங்களிஷ்டப்படி செய்யலாம். துணிமணிகள் உங்களுக்கு வாங்கவேண்டியிருக்கும்; அதற்காக இதோ கொஞ்சம் பணமிருக்கிறது. அது போதாவிட்டால் நாளைக் காலையில் எனது குமாஸ்தா மூலமாக இன்னும் கொஞ்சம் அனுப்புகிறேன். உங்கள் பேரில் சென்னை ஸாசுவத நிதியில் லக்ஷக்கணக்காக ரூபாயிருக்கிறது." என்று சொல்லிக்கொண்டே மேஜையின் பேரில் ரொக்கநாணயமாகவும் நோட்டாகவும் ரூபாய் ஐந்நூறை வைத்துவிட்டு விடை பெற்றுக்கொண்டு போனார்.

பிறகு நாகம்மாளும் லீலாவும் கடைக்கு ஆளனுப்பி தங்களுக்கு வேண்டியதை வாங்கி வரச்சொன்னார்கள். மறுநாள் காலை ஒன்பது மணிக்கெல்லாம் சத்தியநாயகம்பிள்ளை திரும்பி வந்தார். அவரோடுகூட ஜீவரத்தின அம்மாள் வந்திருந்தாள். அவளது கணவருக்கு ராணுவ சேனையில் வேலை; அவர் ஒரு யுத்தத்தில் இறந்துவிட்டார். அந்த அம்மாளுக்கு குழந்தை

குஞ்சுகள்கிடையா. லீலாவுக்கு வசந்தமாளிகை யில் துணையிருப்பதற்காக மாஸம் நூறு ரூபாய் சம்பளத்தில் வந்திருந்தாள். ஒருவருக்கொரு வர் யோகக்ஷேமம் விசாரித்துக்கொண்டு வசந்தமாளிகைக்குப் புறப்பட்டார்கள். அங்கி ருந்து வசந்தமாளிகை பன்னிரண்டு மைல் தூரம். அதைச்சுற்றி காலபட்டிஜமீனும் அதைச் சேர்ந்த நிலங்களும் இருந்தன. அவர் கள் அங்கு போய்ச் சேர்ந்தபொழுது மணி பன்னிரண்டாயிற்று.

---

## THE ALL-INDIA CHILDREN'S MEMORIAL MOVEMENT.

"The movement is more important than the man. Levees and Legislative Councils do not touch, much less mould, the hearts of the common people, who alone make real history: but education will and that is why we attach such a great importance to Lord Hardinge's activities in the expansion of education in India where the night of ignorance is so thick."

"The figure of Samashti-elephant chosen to express the collective mind of society as a whole is drawn by making its component parts consist of nine beautiful women to represent the "Law of numbers" and the "Rhythm and Purpose" of the Social Movement."—Letter to the *Times*.

## பால போத ஸமஷ்டி சேவை ஸாதனம்.

"ஸாதகனிலும் பெரிது ஸாதனம்."

சென்ற விவேகசிந்தாமணி சஞ்சிகையை வாசிப்போர் அது முற்றும் அரசர் பிரதிநிதி ஹார்டிஞ்சு பிரபுவின் வித்யாலக்ஷிய சம்பந்த மானதாயிருக்கிற தென்பதைக் கவனிப்பார்க ளென்று நம்புகிறோம். "நல்ல காரியத்துக்கு நாலாயிரம் தடை" என்பது பழமொழி. அது பொய்க்காமல் குழந்தைகள் முன்னுக்கு வரவேண்டு மென்று நாம் துவக்கிய இந்த ஸத்கர்மத்துக்கு எத்தனையோ தடைகள் உண்டாயின. ஆயினுமென்? தடைகளெல் லாம்நம் மனோபலத்தையும் சங்கல்பஉறுதியை யும் பரிசோதிக்கவே யன்றி வேறு எதற்காக வும் அல்ல. மனோபலமும் ஸங்கல்ப உறுதியும் குறைந்தால் அப்பொழுது தடைகள் இடை யூறு செய்வனவாகின்றன. மனம் சலிக்கா மலும் ஸங்கல்பம் தவறாமலும் உழைத்தால், தடைகளெல்லாம் நம்மிடத்திலுள்ள குற்றங் குறைகளையும், நாம் செய்காரியத்திலுள்ள தப்புத் தவறுகளையும் நமக்கெடுத்துக்காட்டும் தூதர்களுக்குச் சமானம் ஆகின்றன.

நமது சக்ரவர்த்தியாகிய மாக்ஷிமைதங்கிய ஜார்ஜ் அரசர் இந்தியாவுக்கு வந்திருந்த பொழுது பேசிய பேச்சுக்களை யெல்லாம் தமிழில் அச்சிட்டு எல்லாப்பள்ளிக்கூடங்களு க்கும் எல்லா கிராமங்களுக்கும் அனுப்பும்படி சென்னை கவர்ன்மெண்டார் உத்தரவு செய் திருக்கிறார்கள். அவர் ராஜ கம்பீரமாய்ப் பேசிய பேச்சுக்களில் கல்கத்தா யூனிவர்ஸிடி சங்கத்தார் வந்தனோபசாரத்துக்கு பதில் சொன்னது மிகவும் விசேஷமானது. அதில் தான் அவர் "வித்யாலக்ஷியம்" விளங்கப்பேசி னார். அதை யொட்டி இந்தியா கவர்ன்மெண் டாரும் வித்யாவிஷயமாய் ஒரு தீர்மானம் செய்துள்ளார். அதைப்பற்றி விவேகசிந்தா மணியில் விரித்துரைத்திருக்கிறோம். சென்ற ஸெப்டெம்பர் மாஸம் 17-ம்தேதி லார்ட் ஹார் டிஞ்சவர்கள் ஸிம்லாவில் கூடிய இந்தியா சட்ட நிருபண சபையில் பேசிய பொழுது, வித்யா லக்ஷியம் விளங்கக் குழந்தைகளிடத்தில் பூரண அன்பு வைத்துப் பெற்றமனம் கரைந் துருகப்பேசினார். அதைப்பற்றிச் சிறுவர் களும் குழந்தைகளும் நல்வரவு கூறியழைக் கும் வந்தனோபசாரமொழியில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கிறோம். அதை ஒவ்வொருவரும் நன்றாகப்படித்து மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டும். அந்த சஞ்சிகையை வித்யா இலாகாத்தலைவர் மூல மாக எல்லாப்பள்ளிக்கூடங்களுக்கும் அனுப்பு

ஏற்பாடு செய்திருக்கிறோம். அந்த வந்தனோப சார மொழியிலடங்கிய வித்பாலக்ஷியத்தையே லக்ஷியலக்ஷணம் பொருந்த சித்திரப்படமாகவும் தீட்டியுள்ளோம். இது உபாஸனர்க்கமானதாயிருப்பதால் பக்திசிரத்தையோடுநமது சக்ரவர்த்தியாரும் அரசர் பிரதிநிதியும் சூக்ஷ்மமாய்ச் சுட்டிக்காட்டி வெளியிட்ட வித்பாலக்ஷியத்தைக்கிரகித்து அதை சிரவண, மாநந, நிதித்தியாஸ முறைகளால் உள்ளத்திற் பதியவுணர்ந்து, உணர்ந்ததை அநுஷ்டித்து நடக்க விரும்புகிறவர்களுக்கே கொடுக்கப்படும்.

குழந்தைகள் கல்விகற்பது மனப்பழக்கத்தின் பொருட்டே. அதற்கு "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்." எண்என்றால் கணித சாஸ்திரமட்டுமல்ல, ஒண்ணென் றண்ணும் எண்ணத்தின் மூல ஸ்தானமாகிய ஏகீபாவம் என்கிற யோகசித்தியும் அதற்குள் அடங்கியதேயாம். "ஏகன், அநேகன்" என்று பெரியோர் கூறியபடி கடவுளுடைய லக்ஷணங்களில் ஏகத்துவம் முக்கியமானது. அந்த ஏகத்துவமே, "அது நீ, அது நீ" என்கிற பாவனையால் தாதாத்மியசக்தி விசேஷத்தால், "உள்ளது" எல்லா மாகிறது. ஆதலால் அந்த எண்ணுக்குக் காரணமாயிருக்கிற சக்தியை ஜகத்ஜநநி என்றும், லோகமாதா வென்றும், ஸ்ரீலோகநாயகி யென்றும் பெரியோர் பூஜித்து ஸாம்ராஜ்யம் பெற்றிருக்கிறார்கள். எழுத்து என்பது ரேகைலக்ஷணத்தோடு கூடிய எழுத்துக்களை மட்டுமன்றி அந்த எழுத்துக்களின் மூலமாகிய சப்தத்தையும், அந்த சப்தத்திற்குள்ளிருக்கும் துவனியையும், அந்த த்வனியினுள் விளங்கும் ஜ்யோதியையும், அந்த ஜ்யோதிமத்தியில் விளங்கும் சுத்தமனத்தையும் குறிக்கும்.

"எண்" என்பது ஒன்று முதல் ஒன்பது வரையில் உள்ளதாகும். ஒன்பதுக்குமேலுள்ள பத்து என்பது 'ஒன்றும் அன்றும் சேர்ந்தது.' ஒன்று = 1. அன்று = 0. ஒன்றும் அன்றும் சேர்ந்தது = 10. இதற்கு தசமஸ்தானம் என்று பேர். ஒன்று என்பதை உள்ளபடி மனோசக்தியால் நினைக்கலாமேயன்றி ஜடசக்தியால் அதைக்காட்டவாவது கிரகிக்கவாவது முடியாது. ப்ரோபெல் (Frœbel) குழந்தைகளுக்கு ஒன்று என்கிற எண்ணம் உதிக்க கோளாகாரமான (உருண்டைவடிவான) வஸ்துவை போதனஸாதனமாக ஏற்படுத்தியிருக்கிறார். இதைத் தவிர வேறு எதுவும் பொருத்தமானதாக வில்லை. ஏனெனில் மற்றதெல்லாம் அடி, முடி, நடுவென பாகம் ஏற்பட்டதாயிருக்கும்; அல்லது நீளம், அகலம், உயரம் என அளவாகாரம் ஏற்பட்டிருக்கும். இவையெல்லாம் ஒன்றுபட்டிருப்பது கோளாகாரம் (உருண்டைவடிவம்) ஒன்றில் தான் என்று அதைக்குழந்தைகளுக்குப்பிரதமபோதனஸாதனமாக ஏற்படுத்தினர். இது வியஷ்டிபாவத்தில் ஏற்பட்டது. சமஷ்டி பாவத்தில் பூகோளம் தானும் ஏகீபாவத்தையுணர்த்துவதாயில்லை. ஏனெனில் அது நவக்கிரகங்களில்ஒன்று. அதைப்போல் கோளாகாரமான கிரங்கள் பல விருக்கின்றன. அவையெல்லாம் சூரியனைச்சுற்றி வருவதால் சூரியனைச் சொல்லலாமே யெனின், அதுவும் மத்தியிலுள்ள பூலோகமட்டுக்கும் பொருந்துமேயன்றி அதற்கு மேலும் கீழுமுள்ள ஸவர்க்க, பாதாளலோகங்களுடன் பார்க்கில், அது மத்திய லோகமாகிறது. ஆகையால் ஒன்று முதல் ஒன்பது வரையில் எல்லாம் "எண்" என்னும கணக்கில் உள்பட்டதேயாகும். இந்த 'எண்' தானே ஜகத்காரணமாகும். இதை "Number is the law of the universe" என்பர் பூர்வகாலத்துப் பெரியோர். இதை "நவவியூகம்" என்றுரைக்கும் நமது சாஸ்திரங்களும். வியூகம் என்றால் கூட்டம். இவ்வியூகங்கள் ஒன்பதின் சக்திக்கு நவசக்தி யென்று பேர். இதை இங்கிலீஷில் "New Spirit" என்பர். "New" என்னும் மொழியின் உள்ளர்த்தம் பரணவசப்தத்தின் அர்த்தமேயாகும். இதையே மந்திரசாஸ்திரத்தில் (மனம் ஒருவழிப்பட்டு நடப்பதற்கான சாஸ்திரம் மந்திர

சாஸ்திரம்) நவாக்ஷரி என்பர். திருமூலதேவர் இதை "நவாக்கரி" யெனக்குறித்துத் திருமந்திரம் ஓதியிருக்கிறார்.

குழந்தைமனம் உள்ளவர்கள் தானே குழந்தையாவர்கள். குழந்தைமனம் மாசு மறுவற்றது. வயதிற்பெரியோர்களானாலும் வித்யாலக்ஷியம் உணர்ந்தவர்கள் தம் குழந்தை மனம் மாறாதிருப்பர். பாலபோதம் என்பது குழந்தை மனமுடையாருடைய உள்ளுணர்வு. இவ்வுள்ளுணர்வைக் கொண்டே 'ஸமஷ்டி-சேவை' செய்யத்தகும். இவர்களே உண்மையான அதிகாரிகளாவார்கள். கள்ளங்கபடு மனத்திற் படிந்தால் குழந்தைமனம் மாசுமறுக் கொண்டு மாறிப்போம். சுட்டபானையைப் போல் காமக்,குரோத லோப, மோக,மத, மாச்சரியங்களாகிய காமத்தீயால் சுடப்பட்டு, "திருகைமண்" போலுள்ள குழந்தை மனத் தன்மை மாறிவிடுகிறது. பொன்போலுள்ள மனம், மண்போலாகி, மண்ணிலும் சுட்ட பானை யாகிவிடுகிறது. "பொன்குடமுடைந்தால் பொன்னாகும். மண்குடமுடைந்தால் மண்ணாகுமா?" என்பது பழமொழி. அப்படியென்றால் குழந்தைமனம் மாறாத பெரியோர் மனம் பொன்னைப்போல் ஜோதிவிட்டொளிரும். அது உடையினும் (பேதபாவனையினால் வேறுபட்டுச் சிதறினாலும்) ஏகிபாவத்தன்மையினால் பின்னும் அது விவேகஞானத்தால் ஜோதிமயமாகவே விளங்கும். அழுக்குப்பட்ட மனசோ விஷயப்பற்றினால் சிக்குண்டு சுட்ட பானைபோல் சுக்குச்சுக்காயுடைந்து சிதறிப்போம். சிதறிப்போனவற்றை ஒன்று சேர்த்தால் சேர்ந்து முன்னதாக அமையாது. இந்த மனதையே உலகபுத்தி யென்றும், இந்த மண்பானை யுதாரணத்தையே உலகதர்மமென்றும் சொல்லுவர். மண் = ஜடசக்தி; தண் = ஜீவசக்தி; மண்ணும் தண்ணும் சேர்ந்து பக்குவமானது "திருகைமண்". இதையே "பதம்," "பக்குவம்" என்று சொல்லுவர்.

ஆதலால் குழந்தை மனமுடையவர்கள் 'ஸமஷ்டிசேவை' செய்ய வேண்டுமானால், அதற்கு ஒரு ஸாதனம் (உண்மைவழி) வேண்டும். ஸமஷ்டி என்பது ஒன்றுமுதல் ஒன்பதீறாகவுள்ள எண்கள் சேர்ந்தது. இது தசமஸ்தானத்தில் ஜடஜீவ ஐக்கியபாவத்தைக்காட்டும்.

உலகம் ஓடிக்கொண்டேயிருக்கிறது. ஆகையால் தான் ஆனந்த நடராஜாவான ஸத்குரு தாண்டவமாடி உலகதர்மத்தின் மர்மத்தை விளக்கிக்காட்டுகிறார். "எண்" என்கிற பாவனையோடு "நடம்" என்கிற பாவனையும் கூட வேண்டும். நவவியூகங்களும் அப்பொழுது நவரஸங்களாகும். நவரஸங்கள் தானே நவசக்திகளாகும். நவசக்திகள் தானே "ஏகைவ சக்தி" யென்று கூறிய ஒன்றேயான காரண சக்திக்குக்காரியஞ் செய்கின்ற சேடிப்பெண்களாய் விளங்கும். இப்படி ஒன்றும் ஒன்பதுமாயிருக்கும் சக்திகளையே காரண-காரியசக்திகள் என்பர். காரணசக்தியை "ஜகத்ஜநநி" யென்றும், காரியசக்தியை ஜகத் அல்லது பிரபஞ்சம் அல்லது உலகம் என்றும் சொல்லுவர்.

இந்தக் காரணகாரிய சக்திகளையே கஜநாயகியாம் ஸமஷ்டி யானை வடிவமாக அமைத்திருக்கிறோம். இந்தஸமஷ்டியானைஎப்போதும்அசைந்தாடிக்கொண்டேயிருக்கும் சுபாவமுள்ளது என்று மேலே சொன்னதிலிருந்து விளங்கும். ஜகத் சிருஷ்டியிலுள்ள ஆனையின் சுபாவமும் அசைந்தாடிக்கொண்டே யிருப்பதாகும். இந்த ஸமஷ்டியானையையே மனதில் நினைத்துத் தாயார் குழந்தைகளை மடியில்வைத்து ஆட்டி அவர்கள் இளமனதில் ஸநாதனமான உண்மை படியச்செய்வது இவ்வாரியதேசத்தின் வழக்கம். அந்தப்பாட்டைக் கீழ்வரைகிறோம்:—

"ஆனையானை, அரசரானை!
அழகரும் சொக்கரும் ஏறும் யானை!
கட்டுக்கரும்பை முறிக்கும் யானை!
கடைவீதியெல்லாம் சுற்றும்யானை!
குட்டியானைக்குக் கொம்பு முளைத்தது
பட்டணமெல்லாம் பார்க்க வாருங்கோ!"

இதன் உட்பொருள் இது:—கஜநாயகியாம்

ஸமஷ்டி யானையே ஆனை! ஏனெனில்மிருகரூபமான யானை அந்த ஸமஷ்டி யானையின் ஒரு ரோமத்துக்குஈடாகாது. ஆகையால் யானைகளில் எல்லாம் பரமோத்தமமானது கஜநாயகி ஸமஷ்டியானை. அந்தயானையின் ஆணவத்தோலையே பகவான் போர்வையாக அணிந்திருக்கிறார்.

"மனிதர்களில் நான் அரசனாயிருக்கிறேன்" என்று சொன்ன பகவத்வாக்குப்படி, அந்த யானை ஜனசமூகங்களான அரசர்கூட்டங்கள் (Nations of the world) சேர்ந்தயானை.

அழகர்:—அழகேயுருவாயமைந்த ஸத்யஸ்வரூபரும், ஸ்வயம் ஜோதியாய் விளங்கும் சோக்கநாதரும் அந்த யானையை வாஹனமாகக் கொண்டுள்ளார்; அதாவது அவர்கள் தேஹியும் யானை தேஹமுமாக அமைந்துள்ளது.

"கட்டுக்கரும்பை"=அதாவது சக்கையும் சாறும் சேர்ந்துள்ள கரும்புபோல் சுகதுக்க ரூபமான ஸம்ஸாரபந்தத்தை "முறிக்கும்யானை" அந்த ஸமஷ்டியானை தரிசனமானது முறித்துவிடும்.

"கடைவீதி யெல்லாம்"=உலகவியாபாரங்களெல்லாம் நடக்கும் தர்மமாகிய (Evolution is the Law of Life) சிருஷ்டி, ஸ்திதி, லயம் என்கிற முத்தொழில் நடக்கும் வீதிகளிலும், திரோபவம், அனுக்ரகம் என்கிற நடராஜ பாட்டையிலும் கூட,

சுற்றும் யானை=(Spiral Path of Progress) என்கிற பிரவிர்த்தி நிவிர்த்திமார்க்கங்கள் எல்லாவற்றிலும் சுற்றிக்கோலாகலமாய்ப் பவனி வரும் அந்த ஸமஷ்டியானை.

குட்டியானைக்கு:—இப்படிப்பட்ட ஸமஷ்டி யானையின் வயிற்றில் பிறந்த குட்டியானைக்கு ஒப்பான இந்தப்பாலகனுக்கு,

பல்லுமுளைத்தது=போதஞானம் என்கிற உள்ளுணர்வு (தாய்முகம் காணல் என்று இதை உற்சவமாகக் கொண்டாடுவர் இல்லங்தோறும்) உதிக்கலாயிற்று.

பட்டணமெல்லாம்:—ப்ரஹ்மபுரம், ஸ்ரீபுரம், முதலான தேவபட்டணங்களிலுள்ள தேவதைகளெல்லாம்,

பார்க்க வாருங்கோ!=இந்த அதிர்சய திருசியத்தை (அற்புதக்காட்சியை) ப்பார்க்கவந்து இக்குழந்தையை ஆசீர்வதிக்கட்டும்.—என்றபடி.

இதுவே "பாலபோத ஸமஷ்டி சேவை ஸாஸநம்." இதை ஸாதநமாகக் கொண்டு குழந்தைகளைப் பழக்கவிரும்பும் ஸத்புத்ர ஸந்ததிபாக்கியம் பெற்ற பெற்றோர்களும், பள்ளியிற்பழகும் பாலர்களுக்குப் போதனாசிரியராயிருக்கும் பாக்கியம் பெற்ற உத்தம அதிகாரிகளும் பக்திசிரத்தையோடு இதை வாங்கி உபயோகித்து, ஸமஷ்டி-சேவை ஸாதனை கைங்கரியம் நடத்தி வந்தால், பாரதீ மாதா வுளங்களித்து அவர்களுக்கு வேண்டிய வரப்பிரஸாதங்களை யளிப்பாளென்பதிற் சந்தேகமில்லை.

ஓம்தத் ஸத்.

---

## THE VICEROY AND THE CULTIVATION OF THE VERNACULARS.

## அரசர்பிரதிநிதியும் ஸ்வபாஷாபிவிர்த்தியும்.

அரசர் பிரதிநிதியாகிய லாட் ஹார்டிஞ்சவர்கள் சென்னைக்கு விஜயமாய் வந்திருந்தபொழுது "சென்னை யூனிவர்ஸிடி லைப்ரெரி" கட்டடத்துக்கு ஸ்தாபனக்கல் வைக்கும் சடங்கை நிறைவேற்றினர். அப்பொழுது யூனிவர்ஸிடி வைஸ்-சான்ஸெலராகிய ஸர் ஜான் வாலிஸ் அவர்கள் அரசர் பிரதிநிதிக்கு ஒரு வந்தனோபசாரப் பத்திரம் படித்தளித்தார். அதில் ஸ்வபாஷைகளை விர்த்திக்குக் கொண்டு வருவதில் சென்னை யூனிவர்ஸிடி சங்கத்தார் அதிக முயற்சியெடுத்துக் கொள்வதாகச் சொல்லியிருந்தார். உண்மையில், யூனிவர்ஸிடி பரீக்ஷைகளிலிருந்து ஸ்வபாஷைகள் நீக்கப்பட்டிருக்கின்றன. வியாஸம் ஒன்றுமட்டும்

ஸ்வபாஷையில் எழுதத் தெரியவேண்டு மென்று ஒரு நிபந்தனையிருக்கிறது. காலேஜ்களில் படிக்கிற 3000-பிள்ளைகளில் 17-பேர் தான் தமிழ் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எம். ஏ. பரீக்ஷைக்குப் படிப்போரில் ஒருவர் கூடவில்லை. ஆயினும் முதல் பரீக்ஷைக்கு ஸ்வபாஷையில் வியாஸம் எழுதல் பரீக்ஷைக்கு அவசிய மென்றிருப்பதால், அதனாலேயே சென்னை யூனிவர்ஸிடியார் ஸ்வபாஷையைப் போற்றிவருவதாகச் சொல்லிக் கொண்டார்கள் போலும். இந்த உண்மை அரசர்பிரதிநிதிக்குத் தெரியாது. ஆதலால் அவர் பதிலுரைத்ததில் ஸ்வபாஷையைப் போற்றிவருவதில் சென்னை யூனிவர்ஸிடியார் எடுத்துக் கொள்ளும் முயற்சி மிகவும் மெச்சற்பாலதென்றும், ஸ்வபாஷாபிவிர்த்தியினாலே வித்யாலக்ஷியம் விளங்கவேண்டு மென்றும் அரசர்பிரதிநிதியவர்கள் தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். இது மிகவும் சிலாக்கியமே. அரசர்பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்சு, வித்யா லக்ஷியத்தை யுணர்ந்து உண்மை யோதுவதில் மஹா நிபுணரென்றும் கைதேர்ந்தவ ரென்றும் காட்டியிருக்கிறார். மாணவர்கள் சுபாவத்தை நன்றாக அறிந்தவர். "பெற்ற மனம் பித்து" என்பதுபோல், அவருக்குப் பிள்ளைகளிடத்தில் மன உருக்கம் உண்டு. அப்படிப்பட்டவர் ஸ்வபாஷாபிவிர்த்தியின் முக்கியத்தை யொப்புக்கொண்டு அதை முன்னுக்குக் கொண்டு வருவதின் சிலாக்கியத்தைப்பற்றித் தமது அபிப்பிராயத்தை வெளியிட்டுப்பேசினதால், அத்துறையிலிறங்கி உழைப்போருக்கெல்லாம் ஒருவித மனோதிடமுண்டாகக் காரணமாயிற்று. உண்மையில் ஸ்வபாஷையை எல்லாரும் நிராகரித்தே வந்தாலும், அப்படிச்செய்வது சரியல்ல வென்ற மட்டில் ஏற்பட்டது விசேஷம் தான். தாய்பாஷையில் பயிர்ச்சி யில்லாதவனுக்கு வித்யாலக்ஷியம் விளக்குவது துர்லபம். சோற்றுப்படிப்புப் படிப்பதனால் மனப்பழக்கம் உண்டாகாது; கிளிப்பிள்ளை போல கேட்டதைக் கற்றதை யுண்மையுணராமல்சொல்லிக்கொண்டுபிழைக்கும் ஏட்டுப்படிப்புப் படித்தவர்களாகலாம். யூனிவர்ஸிடி பட்டங்களும் பெற்றுவிடலாம். தாய்பாஷையைச் சிறுவயதில் அலக்ஷியம் செய்துவிட்டு, அந்த பாஷையில் பயிர்ச்சியில்லாமற்றானே அந்நிய பாஷையில்பயின்று படித்துத்தேறலாமென்று நினைக்கிறவர்கள் கதி அதோகதிதான் என்பதிற்சந்தேகமில்லை. அவர்கள் அரசனை நம்பிப் புருஷனைக்கைவிட்ட பேதைக் கொப்பாவார்கள். ஸ்வபாஷைப் பயிர்ச்சியுமின்றி அந்நிய பாஷையிற்றேர்ச்சியுமின்றி ஆயுள் முழுவதும் இரவல் சரக்கைக்கொண்டு தான் அவர்கள் பிழைக்கவேண்டும். நம்மில் படித்தவர்கள் மனப்பழக்க மற்றவர்களாயிருப்பதற்குக் காரணம் இதுவே. இக்குறையை நிவர்த்திக்க நாம் எல்லாரும் பாடுபட்டுழைக்கவேண்டும். நாம் கெட்டாலும் நமது குழந்தைகளாவது உருப்பட்டு முன்னுக்கு வரும்படி ஸ்வபாஷாப் பயிர்ச்சியை ஆதரித்து வரல்வேண்டும்.

---

## THE MULTI-MELLIONAIRE'S SECRET OR, THAT WHICH MONEY CANNNOT BUY.

## கோடீசுவரன் குறை.

அல்லது பணத்துக்கெட்டா மணம்.

கோடீசுவரன் தான் தேடிச்சென்ற பேர் வழியைக் காணாமல் பட்டணம் வந்ததும் தன்னுடைய ஜாகைக்குப் போகாமல் அவனுடைய 'க்ளப்'புக்குச் சென்றான்.

'க்ளப்' என்றால் என்ன? கூட்டம் என்று பேர். பலர் கூட்டமாய்க் கூடி வசிக்குமிடத்துக்கு 'க்ளப்' என்று பேர். இங்கே வீட்டிலுள்ள சௌக்கியங்களெல்லாம் கிடைக்கும் அந்த 'க்ளப்' அங்கத்தினரைத் தவிர வேறு யாரும் அங்கே வரக்கூடாது. சாப்பாடு, ஜாகை, காபி, பந்து விளையாட்டு, சொக்கட்டான், சீட்டாட்டம், சதுரங்கம் முதலிய விளையாட்டுகளுக்கு வசதியுண்டு. பத்திரிகைகளும்

புஸ்தகங்களும் வாசிப்பதற்கு ஏராளமாயுண்டு. நமக்குள் சாதக புருஷர்களுக்கு 'மடம்' "ஆலயம்" எப்படியோ, அப்படிப்போல் உல்லாஸ புருஷர்களுக்கு 'க்ளப்' பரமசாதகமாயுள்ளது. உண்டுடுத்துறங்கி விளையாடவும் 'தமாஷாய்'ப் பொழுது போக்கவும், 'க்ளப்' இன்றியமையாத ஸ்தாபனம். கோடீசுவரனுடைய 'க்ளப்' புக்குப் பேர் 'ஜகப்பிரஸித்த க்ளப்.'

'ஜகப்பிரஸித்த க்ளப்' வாசலில் இவன் மோட்டார் வந்துநின்றதும், வில்லைதரித்த சேவகன் ஓடிவந்து வண்டியின் கதவைத்திறந்தான்.

கோடீசுவரன் மோட்டார் வண்டியை காடிகானுவுக் கனுப்பிவிட்டு, சேவகனைப்பார்த்து 'காபியும் சிற்றுண்டியும்' என்றான்.

உடனே ஒரு பரிசாரகன் வெள்ளித்தட்டில் சிற்றுண்டிகளும் காபித் தண்ணீரும் பால் சர்க்கரையும் வைத்துக் கொண்டுவந்து பக்கத்திலுள்ள மேஜைமேல் வைத்தான்.

கோடீசுவரன் களைப்பாரப் பசி தீர்த்துக் கொண்டு, பந்தடிக்கிற அறையில் புகுந்து 'பில்லியர்ட்' என்கிற பந்து விளையாடப் புகுந்தான்.

அவன் இஷ்டர்களோடு சிரித்து விளையாடிக் கொண்டு உல்லாஸமாக விருக்க முயன்றாலும், அவன் உள்ளக்கவலை அவனை விட்டதில்லை.

* * * * *

கோபாலகிருஷ்ணன் (கோடீசுவரனுடைய நாமகரணம்) நிர்மலாநந்தத்தை விவாகம் செய்துகொள்ள விரும்பினாலும் சொற்ப சம்பளத்தில் அவளைக்கலியாணம் செய்துகொள்ள மனமற்றவனா யிருந்தான். ஸம்ஸாரம் பலத்துப்போனால் என்ன செய்கிறதென்கிற கவலை அவனுக்கு அதிகமாயிருந்தது. ஆகவே, ஒருநாள், இதைப்பற்றி யோஜனை செய்துக் கொண்டிருக்கையில், திடீரென்று அவனுக்கு ஒரு யுக்தி தோன்றியது.

இந்தியாவிலிருந்து சீக்கிரத்தில் பணம் சேர்ப்பது முடியாத காரியமென்று அவனுக்கு நன்றாகப்பட்டது. ஆகவே தேசாந்திரம் போய் குவியல் குவியலாகப்பணம் சம்பாதித்துக் கொண்டுவந்து நிர்மலாவைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று நினைத்தான்.

நினைத்ததுதான் தாமஸம், உடனே அதற்கு வசதியும் ஏற்பட்டது.

ஏனெனில் அப்பொழுது அவன் கையில் வைத்திருந்த சமாசாரப் பத்திரிகையில் தென்னாபிரிகாவில் ஒரு பெரிய சுரங்கக் கம்பெனிக்கு எழுதப் படிக்கத்தெரிந்த கணக்குப் பிள்ளை வேண்டுமென்றும், சம்பளம் 500-ரூபாயுடன் பொன் சுரங்கம் வேலைசெய்வதில் வரும் லாபத்தில் ஒருபாகமும் கிடைக்குமென்றும் விளம்பரம் பிரசுரிக்கப் பட்டிருந்தது. "இதுவும் நம் அதிர்ஷ்டம் தான்"! என்று சொல்லிக் கொண்டு, அவன் இரண்டாம் பேரோடு சொல்லாமல் அன்று இராத்திரியே புறப்பட்டு தூற்றுக்குடி சென்று அங்கிருந்து கொழும்புக்குப்போகும் கப்பலிலேறி கொழும்பு மார்க்கமாய் தென்னாபிரிகாவுக்குப் பிரயாணமாகப் போய்விட்டான்.

* * * * *

இவன் திடீரென்று காணாமற் போகவே கோகிலாம்பாள் (இவன் தாயார்) மிக விசாரப்பட்டுக் கொண்டிருந்தாள். நிர்மலாநந்தம் இதில் ஏதோ சூதிருக்கிறதென்று மட்டும் நினைத்தாள். இவன் ஏதோ பணக்கார சம்பந்தம் செய்துகொள்ள வேண்டி யாருடனும் சொல்லாமற் போயிருக்கிறானென்று நினைத்தாள். இது அவளுக்குப் புருஷரிடத்திலிருந்த வெறுப்பைப் பதின் மடங்கு அதிகப்படுத்திற்று. வீட்டில் தன் அம்மாமியும் அம்மங்கார் விமலையும் படும் துயரத்தைக்கண்டு சஹிக்க முடியாமல், தான் தனியாகச்சென்று ஜீவனந் தேடுவதே உத்தமமென்று நினைத்தாள்.

அப்பொழுது காஞ்சீபுரத்தில் ஆற்காட்டு நாராயணசாமி முதலியார் ஒரு பெண் பாடசாலை நியமிக்கக் கருதியிருந்தார். அப்பள்ளிக்கூடத்துக்குத் தலைமை உபாத்திமை ஸ்தானத்துக்குப் படித்துத்தேறின ஹிந்துமாது ஒரு

வர் வேண்டுமென்று அவர் வித்யா இலாகாத் தலைவரைக் கேட்டுக்கொள்ள, அவர் நிர்மலான ந்த்தைப் பொறுக்கியெடுத்து அந்த ஸ்தானத்துக்கு யோக்கியமானவரென்று சிபார்சு செய்தார்.

நிர்மலா, உடனே, அந்த வேலையை ஒப்புக்கொண்டு காஞ்சீபுரம் சென்றாள்.

கோகிலாம்பாளும் விமலையும் மட்டும் சென்னையிலிருந்தார்கள். கோகிலம் புத்திர சோகத்தினால் உடம்பிளைத்துத் துரும்பாகப் போய்விட்டாள். "பட்ட காலிலேபடும், கெட்ட குடியே கெடும்" என்கிற பழமொழிப்படி, கோகிலாம்பாளுக்கு கஷ்டத்தின்மேல் கஷ்டமாக நேர்ந்தது. கைப்பொருளில்லாக் கொடுமை அவர்கள் கஷ்டத்தை வெளியில் காட்டிக்கொள்ளாமல் தானே மானமாய்க் குடித்தனம் செய்ய வேண்டியிருந்தது.

மனோதைரியம் இழந்து விட்டால், சூத்திரப் பாவைபோல் ஆடும் இந்த தேஹம், சூத்திர மறுந்த பொம்மைபோல் அசையாது ஆடாது நின்றுவிடும். இது கோகிலாம்பாள் விஷயத்தில் உண்மையாக நேர்ந்தது.

விமலா தன்னாலானமட்டும் தன் தாயாரைத் தேற்றிப்பார்த்தாள் ; முடியவில்லை. அவளுடைய மனோ விசாரம் இவளையும் பற்றியது. நிர்மலாநந்தம் தன் சம்பளத்தில் மூன்றிலொருபங்கை விமலாவுக்கு அனுப்பி வந்தாள். முதலில் அதைக்கொண்டு கஷ்டஜீவனம் செய்து வந்தாலும் இப்படி வெகு காலத்துக்கு நடக்குமென்று நினைப்பது கூடாமலிருந்தது. விமலாவுக்கு நிர்மலாவோடுகூடச் சென்று உபாத்திமைத்தொழில் செய்து பிழைக்கலாமென்கிற அபிலாசையுண்டு. ஆனால் கோகிலாம்பாள் புத்திரசோகத்தில் சென்னையை விட்டுத் தான் எங்கும் வெளிக்கிளம்புவதில்லை யென்று ஒரே பிடவாதமாகச்சொல்லி சாதித்தாள். தாயாரைத் தனிமையில் விட்டுப் போக விமலாவுக்கு இஷ்டமில்லை. ஆகவே வந்ததெல்லாம் வரட்டுமென்று காஞ்சீபுரம் பெண்பாடசாலை உபாத்திமைத் தொழிலை வேண்டாமென்று சொல்லித் தள்ளிவிட்டாள்

நிர்மலானந்தத்துக்கு இது மிகவும் கஷ்டமாயிருந்தது. ஏனெனில் விமலா கஷ்டப்படுவது அவளுக்குப் பெருந் துன்பமாயிருந்தது. அதோடுகூட, கோகிலாம்பாள் தன் பிள்ளை காணாமற்போனதற்குக் காரணம் நிர்மலா தான் என்று நினைத்தாள். நினைத்ததன்றி சொல்லியும் காட்டினாள். இது நிர்மலாவுக்குப் பச்சைப் புண்ணில் கோலெடுத்துக் குத்துவது போலிருந்தது. இந்த ஹிம்சை பொறுக்க முடியாமல்தானே அவள் தனிஜீவனம் செய்யப் போனாள்.

விமலாவுக்கு, தன் தாயார் சொல்லுவது சரியல்லவென்று பட்டாலும், அவளுக்கு சமாதானம் சொல்லமுடியாமல் சும்மாவிருந்தாள். இதனால் நிர்மலா எப்படியானாலும் தனிஜீவனம் செய்து பிழைப்பதைவிட வேறு வழியொன்றும் காணாமல் விமலாவை விட்டுப் பிரிந்துபோக நேரிட்டது.

விமலாவுக்கு இது பெருங் கஷ்டமாகவிருந்தது. ஆனால் தன் தாயாரைத் துன்பத்தில் விட்டுப் பிரிய அவளுக்கு மனம் துணியவில்லை, ஆகவே எல்லாக் கஷ்டங்களையும் பொறுத்துக்கொண்டு சென்னையில் தானே யிருக்க வுடன்பட்டாள். இந்த அசந்தர்ப்பங்களுக்கு நடுவே கலியாணம்செய்து கொண்டால் அதுவொரு பெருந் துன்பமாகுமென்று அவ்வெண்ணத்தையே விட்டொழித்தாள்.

* * * * *

தென்னாபிரிகாவில் நன்னம்பிக்கை முனை யென்று ஒரு முனையிருக்கிறது. இந்தியாவுக்குக் கன்னியாகுமாரி முனைபோல் ஆபிரிகாவுக்கு நன்னம்பிக்கைமுனை அதன் தென் கோடி முனையாகவுள்ளது. அந்த முனையைப்பற்றியே அந்நாட்டுக்கும் 'கேப்கலனி' எனப்பேர் உண்டாயிற்று. அங்கே டிரான்ஸ்வாலிலுள்ள பொன் சுரங்கக் கம்பெனிகளுக்கெல்லாம் ஏஜண்டாயிருந்த பொன்னம்பலக் கூட்ட

த்தார்என்கிற வர்த்தக கம்பெனி யொன்றிருந்தது. அதில் முதலாளிகள் பெரும்பாலார் ஐரோப்பியர்களானாலும் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களில் நால்வர் அவசரமாகச் சீமைக்குப் போக விரும்பும் வெள்ளைக்காரர்களுக்கு சமயத்துக்குதவிசெய்து, அவர்கள் வழக்கம்போல் ஒன்றுக் கிரண்டாக வட்டிபோட்டுக் கணக்கு வைத்துக் கடைசியில் பெருமுதல் சேர்த்துவிட்டார்கள். இந்த முதல் ரொக்கமாகவின்றி பொன் சுரங்கக் கம்பெனிகளின் பங்குச்சீட்டுகளாக விருந்தது. இந்தப் பங்குகளை விற்றால் பின்னால் வரும் லாபம் போய்விடுமென்று அவர்கள் சொந்தக் கணக்கர்களை வைத்துத் தங்கள் காரியத்தைப்பார்த்து வரத் தீர்மானித்தார்கள்.

கோபாலகிருஷ்ணன் அவர்களுடைய விளம்பரத்தைப் பார்த்து விட்டுத்தான் உடனே புறப்பட்டான்.

அவன் நன்னம்பிக்கை முனை வந்து சேர்ந்ததும் அக்கம்பெனித் தலைவர்களைக்கண்டு பேச, அவர்கள் இவர் மதராஸ் பாங்கியில் பொறுப்பானவேலையிலிருந்தவரென்று கேட்டு அதிசந்தோஷப்பட்டு உடனே இவரைக் கணக்கர் வேலையில் அமர்த்திக்கொண்டார்கள், உள்நாட்டிலிருந்து வரும் தங்கப் பாளங்களையும் தங்க உருக்குக் கட்டிகளையும் விலை மதிப்பிட்டு வாங்கிச் சுத்திசெய்து விற்பது அவர்கள் தொழிலில் ஒன்று. கொஞ்ச நாளில் கோபால கிருஷ்ணன் இந்த வேலையில் அதி நிபுணனாய் விட்டான்.

---

## THE MISSING MAN.
## காணாமற்போன மனிதன்.

நான் தொழிலில் ஒரு வைத்தியன். என் வீடு தங்கசாலையில் 24-வது நம்பர். இரவு பத்துமணி இருக்கும். மழை சரமாரியாகப் பெய்து கொண்டிருந்தது. அப்பொழுது யாரோ கதவைத்தட்டினார்கள். "இந்த ராத்திரியிலும் வியாதிக்காரர்களா?" என்று முணு முணுத்துக்கொண்டே என்மனைவி கதவைத்திறக்கப் போனாள். கதவை இடித்தது பக்கத்து வீட்டு மாசிலாமணி முதலியாரின் மனைவி பாகீரதி அம்மாளே ஒழிய வேறு எவரும் இல்லை. மாசிலாமணி முதலியார் தனவந்தர். வயது முப்பது இருக்கும், அவர் கொஞ்சம் குடிகாரர். சில சமயங்களில் போதை ஜாஸ்தியாக இரவு முழுவதும் சாராயக்கடையிலேயே மயக்கமாக விழுந்து கிடப்பர். அப்பொழுது எவராவது அவரை வண்டியில் போட்டு வீடு கொண்டுவர வேண்டிவரும். இப்பொழுது அவர் வீடு வந்து இரண்டு நாளாயிற்றாம். ஆகையினால் சுற்றத்தாரில்லாத பாகீரதி அம்மாள் எனது மனைவியிடம் ஒத்தாசைக்காக வந்தாள். நான் உடனே புறப்பட்டு அவர் வழக்கமாய்ப் போகும் சாராயக்கடைக்குப் போனேன். அங்கு அவர் பெஞ்சியின் பேரில் பிணம் போல் படுத்திருந்தார். அவர் வழக்கமாய் சாப்பிடும் சாராயத்தோடுகூட கஞ்சாவையும் அளவில்லாமல் சாப்பிட்டதின் பலனாக நான் கண்ட கதியில் கிடந்தார். அச்சாராயக்கடையில் இவரைப் போல் பலர் இருந்தார்கள். இவரை நான் மெதுவாகத்தட்டி எழுப்பினேன். அவர் கண்விழித்து "யார்?" என்று மெல்லியகுரலில் கேட்டார். நான் தான் ரத்தினம் என்றேன். ரத்தினமா? இன்று என்ன கிழமை என்றார். செவ்வாய்க்கிழமை என்றேன். செவ்வாய்க் கிழமையா? அடாடா! நான் திங்கட்கிழமை தான் வந்தேன். பாகீரதி என்ன பண்ணுகிறாளோ என்றார். பிறகு அவருக்குத் தேறுதல் சொல்லி நடத்தி அழைத்து வருகையில், ரத்தினம், இரண்டு அடி முன்னால் போய்ப் பின் "திரும்பிப்பார்" என்று ஒரு சப்தம் கேட்டது. அப்படியே திரும்பிப் பார்த்தேன். அங்கு ஒரு கிழவன் உட்கார்ந்திருந்த இடத்தில் எனது சிநேகிதரும் துப்பறியும் உத்தியோகத்தில் பேர்போனவருமான சுந்தரம் இருந்தார். அவர் என்னைப்பார்த்து "ரத்தினம், உன் சிநேகிதரை வண்டியில்

வீட்டிற்கனுப்பி விட்டு வெளியில் காத்துக் கொண்டிரு" என்றார். அவர் சொன்னபடி நான் மாசிலாமணி முதலியாரை ஒரு மாட்டு வண்டியில் அனுப்பிவிட்டு வெளியில் காத்துக் கொண்டிருந்தேன். உடனே சுந்தரம் அங்கு வந்து சேர்ந்தார். வந்து அங்கு நின்று கொண்டிருந்த ஒரு குதிரை வண்டியைக் கூப்பிட்டு அதில் ஏறிக்கொண்டு என்னையும் ஏறிக்கொள்ளச் சொன்னார். ஏறிக்கொண்ட பிறகு அவர் என்னைப்பார்த்து "ரத்தினம்" திருவல்லிக்கேணியில் செல்வகேசவராய முதலியார் என்பவர் இருக்கிறார். அவர் மனைவி பெயர் தனஅம்மாள். அவருக்கு வரும்படி கிட்டத்தட்ட ஐம்பது ரூபாய்வரும். நாள் தவறாமல் காலை 10 மணிக்குப் போய் இரவு எட்டுமணிக்கு வருவார். அவருக்கு என்ன வேலை என்பது யாருக்கும் தெரியாது. திங்கட்கிழமை தனஅம்மாள் சவுகார்ப்பேட்டை போய் அடகு வைத்திருந்த ஒரு நகையை மீட்டுக்கொண்டு திரும்பினாள். இப்பொழுது நான் இருந்த சாராயக்கடை வழியாக வருகையில் சாராயக்கடை ஜன்னலருகில் தனது கணவனைப்பார்த்தாள். இவளைப்பார்த்து அவன் அதிசயத்தால் கையைவிரித்து சாராயக்கடைக்குள் மறைந்து விட்டான். கணவனுக்கு ஏதோ அபாயம் நேர்ந்து விட்டதாக எண்ணி அதற்குள் நுழைந்தாள். ஆனால் இருளப்பகிருமணி (அக்கடைக்காரன்) கதவைச் சாற்றி அவளை வாசலில் மென்னியைப்பிடித்து தள்ளினான். தனஅம்மாள் கூக்குரலிட, அதைக் கேட்ட ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் ஓடி வந்து செல்வகேசவராய முதலியாரைத்தேடினார்கள்.

"அவர் இருந்த அடையாளமே காணோம். இருளப்பகிருமணி அவர் வரவே இல்லை என்று மறுத்துவிட்டான். ஆனால் தனஅம்மாள் தான் கணவனைப் பார்த்ததாக பிடிவாதமாய்ச் சொன்னதால் அறை அறையாகச் சோதனை பண்ணினார்கள். இவைகளில் ஒரு அறையில் செல்வகேசவராய முதலியின் உடுப்புகள் அகப்பட்டன. இவைகளினால் சந்தேகம் உண்டாக இருளப்பகிருமணியையும் அங்குஅப்பொழுது இருந்த ஒரு பிச்சைக்காரனையும் சிறையில் வைத்து விட்டார்கள்." என்றார். ஊரெல்லாம் ஏதோ கொலை நடந்து விட்டதென்று 'காப்ரா' வாயிருந்தது. போலீஸார் வழக்கம் போல் ஒருவாரத்துக்கு இல்லாத கெடுபிடியெல்லாம் செய்து ஜனங்களை நடுங்கச்செய்து விட்டார்கள். சுந்தரம் மட்டும் மனம் கலங்காமல் நிதானமாய் எல்லாவற்றையும் கவனித்து வந்தார்.

இந்த வாரத்திற்குப் பிறகு நடந்த போலீஸ் விசாரணைகளை நடந்தபடி சொல்லலாமேயன்றி மற்ற இரகசியங்களை வெளியிட அதிகாரமில்லை. ஆயினும் சொல்லக்கூடியதைச் சொல்கிறேன் என்று சொல்லி, பின்வருமாறு சொன்னார்:—

விசாரணைக்காக மேலதிகாரி வரதசுந்தரம், இன்ஸ்பெக்டர் வடிவேலுமுதலியார், துப்பறியும், எனது நண்பர் சுந்தரம், தனஅம்மாள், இருளப்பகிருமணி, பிச்சைக்காரன் எல்லோரும் கூடியிருந்தார்கள்.

வரதசுந்தரம்:—வடிவேலு முதலியாரே இந்தக்கேஸில் நடந்தவைகளை விவரமாய்ச் சொல்லும்.

வடிவேலு முதலியார்:—நான் சென்னை கிழக்குப் பிரிவைசேர்ந்த போலீஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர். திங்கட்கிழமை நான் ஆபீஸுக்கு போகையில் தனஅம்மாளின் கூக்குரல் கேட்டது. அந்த அம்மாள் தன் கணவனைச் சாராயக்கடையில் பலாத்காரம் செய்வதாக கத்திக் கதவைத்தட்டிக் கொண்டு இருந்தனர். நான் போலீஸ் இனிஸ்பெக்டர் என்பதைத் தெரிவித்த பிற்பாடு கதவு திறக்கப்பட்டது. அப்பொழுது, இங்கு நிற்கும் இருளப்பகிருமணியையும் இந்த பிச்சைக்காரனையும் தவிர உள்ளே வேறுயாரும் இல்லை. கிருமணியை செல்வகேசவராயமுதலியார் வந்தாரா? என்று கேட்டதற்கு கிருமணி "அப்பேர்ப்பட்ட ஆசாமியையே தெரியாது" என்று விட்டான்

ஆனல் தனஅம்மாள் தான் பார்த்ததாக சத்தியம் பண்ணினதால் நான் அதை முற்றிலும் பரிசோதனை செய்தேன். பரிசோதனை செய்ததில் இரத்தக்கரையுடன் கூடிய துணிமணிகள் அகப்பட்டன. அவைகள் செல்வகேசவராய முதலியாரது என்று தனஅம்மாள் சொல்லுகின்றனள்.

தனஅம்மாள்:—"நான் திருவல்லிக்கேணியில் பெரிய தெருவில் இருக்கிறேன். அந்த வீடு எங்களுக்கு சொந்தம். எனது கணவர் மாசம் பிறந்தால் கிட்டதட்ட ஐம்பதுரூபாய் கொண்டு வந்து கொடுப்பார். அவர் குடிகாரர் அல்ல. அவருக்கு என்ன உத்தியோகம் என்பது எனக்குத்தெரியாது. தினம் காலை பத்து மணிக்குப்போய் மாலை எட்டுமணிக்கு வருவார். அவருக்கு ஓய்வு நாள் என்பது கிடையாது. திங்கட்கிழமை மத்தியானம் நான் சவுகார்பேட்டைக்கு ஒரு காரியமாகப்போய் திரும்பிவருகையில் மேற்படி சாராயக்கடை ஜன்னலில் எனது கணவர் என்னை ஒத்தாசைக்கு கூப்பிடுவதுபோல் கையைக்காட்டி அழைத்தார். சாராயக்கடை வாசலில் போய் கதவைத்தட்டினேன். திறக்கவில்லை. கதவு திறக்காமலிருப்பதற்காக யாரோ உள்ளிருந்து அதன்மேல் சாய்ந்து கொண்டிருந்தார். பயத்தினல் கத்தினேன். இனிஸ்பெக்டர் வடிவேலு முதலியார் ஓடிவந்தார். அவர் வந்து நான் போலீஸ் இன்ஸ்பெக்டர் என்று சொன்ன பிறகு கதவுதிறக்கப்பட்டது. உள்ளே இவ்விருவர்கள் தான் இருந்தார்கள். எனது கணவரைப்பார்த்ததில்லை என்றும், அவர் இங்குவரவேயில்லை என்றும் இருவரும் மறுத்தார்கள். நான் "இல்லை அவரைப்பார்த்தேன்" என்று சத்தியம் செய்ததின் பேரில் இனிஸ்பெக்டர் உள்ளே சென்று பரிசோதித்தார். உள்ளே போய்ப் பார்த்ததில் அவருடைய துணிகள் அகப்பட்டன. அவைகளில் ரத்தக்கரைபட்டிருந்தது" என்றாள்.

பிறகு வரதசுந்தரம் இருளப்பகிராமணியைக் கூப்பிட்டு நயமாயும் பயமுறுத்தியும் செல்வகேசவராய முதலிக்கு நேர்ந்தவைகளை ஒன்று விடாமல் சொல்லச்சொன்னார்கள். ஆனல் கைதிகள் இருவரும் தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று பிடிவாதம் பிடித்தார்கள். அதன்மேல் இன்னும் போலீஸார் ஏதாவது உளவுகண்டுபிடிக்கிற வரையில் அவர்களை சிறையில் வைத்தார்கள் என்றார்.

இப்படி சொல்லி முடித்ததும் வண்டிநின்றது. நாங்கள் இறங்கினேம். ஒரு அம்மாள் வெளிச்சத்துடன் வந்து கதவைத் திறந்தார்கள். பிறகு நாங்கள் அங்கேயே சாப்பிட்டுவிட்டு படுக்கப்போனேம்.

தனஅம்மாள் எங்கள் இருவரையும் பார்த்து (முக்கியமாக சுந்தரத்தை) இதுவரை விசாரணை செய்ததில் எனது கணவன் இருக்கிறாரா, அல்லது இறந்துவிட்டாரா என்று கேட்டாள். அதற்கு எனது நண்பர் சுந்தரம் தலையை ஆட்டிக்கொண்டு இது வரையில் எனக்குத் தெரிந்த வரைக்கும் அவர் இறந்து விட்டாரென்று தான் தோன்றுகிறது என்றார். தனஅம்மாள் "நிச்சயம்தானு" என்று சிரித்துக் கொண்டே சொல்லி ஒரு கடிதத்தை அவரிடம் கொடுத்தாள்.

அது பின்வருமாறு இருந்தது.

"சாலைத்தெருவு,

மதராஸ், டிஸெம்பர் 10உ

கண்மணி,

பயப்படவேண்டாம், நான் சௌக்கியமாய் இருக்கிறேன், என்னைப்பற்றி விசாரப்படா தே. 5,6 நாளில் வந்து விடுகிறேன்.

உனது

செல்வகேசவராயன்.

திருவல்லிக்கேணி பெரியதெருவில் இருக்கும் தனஅம்மாளுக்குக் கொடுப்பது."

இதைப்பார்த்து சுந்தரம் பின்வருமாறு தனஅம்மாளைக் கேள்வி கேட்கலானர்.

சுந்தரம்:—சாராயக்கடையில் உமது கணவரைப்பார்த்தது நிச்சயம் தானு?

தனஅம்மாள்:—அதற்கு சந்தேகமே இல்லை.

சுந்தரம்:—அவர் உம்மைக்கண்டு கையை விரித்தது ஆச்சரியத்தினல் செய்திருக்கலாமல்லவா?

தனஅம்மாள்:—செய்திருக்கலாம்.

சுந்தரம்:—திடீரென்று மறைந்தது உங்களிடமிருந்து ஒளிந்துகொள்வதற்காக இருக்கலாமல்லவா?

தனஅம்மாள்:—இருக்கலாம்.

சுந்தரம்:—இப்பொழுது வந்த கடிதாசியின் கைபெழுத்து உமது கணவனது தானா?

தனஅம்மாள்.—அதற்கு சந்தேகமில்லை.

சுந்தரம்:—சரி, போகலாம். நாளை 10-மணிக்குள் உங்களுக்கு முடிவாகச்சொல்லிவிடுகிறேன் என்றார்.

பிறகு நாங்கள் படுத்தோம். அன்று மாலை இரண்டுமணிக்கெல்லாம் சுந்தரம் எழுந்துவிட்டார். எழுந்து தலையணை மேல் தலையணையாக நாலு தலையணைகளைப் போட்டு அவைகளின் மேல் உட்கார்ந்துகொண்டு சுருட்டுப்பிடிக்கலானார். 4-மணிக்கு அதைவிட்டு எழுந்து கீழேபோனார். போய் சிறிது நேரத்திற்கெல்லாம் சொம்பு ஜலமும், சோப்பும், துடைக்கத்துணியும் எடுத்துக்கொண்டு என்னை எழுப்பினார். பிறகு நாங்களிருவரும் புறப்பட்டு ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு போலீஸ் ஸ்டேஷன் போய்ச் சேர்ந்தோம். அங்கு போலீஸ் இன்ஸ்பெக்டர் வடிவேலு முதலியார் இருந்தார். சுந்தரம் சிறையில் வைக்கப்பட்டிருந்த பிச்சைக்காரனைப்பார்க்க வேணுமென்று சொல்ல, வடிவேலு முதலியார் "தரித்திரம் பிடித்தவன். ஸ்நாநம் செய்யமாட்டேன் என்கிறான். அவனைத் தொட்டாலே ஆறுமாசத்திற்கு அழுக்குப் போகாது" என்று முணுமுணுத்துக் கொண்டே கைதி அறையைத்திறந்தார்.

கைதி தூங்கிக்கொண்டிருந்தான். சுந்தரம் அவனைத்தூக்கி உட்கார்த்தி வைத்து (எங்களை வெளியில் போகச் சொல்லிவிட்டு) அக்கைதியை சோப்புபோட்டு தேய்க்கத்தொடங்கினார். பிறகு கொஞ்சநேரத்திற்கெல்லாம் கதவைத் திறந்து எங்களை உள்ளே வரச்சொன்னார். போனோம். என்ன அதிச்சயம். அங்கு ஒரு கைதிக்கு பதிலாக புதிதாக வேறொரு கண்யத்தோற்றமுள்ள மனுஷன் படுத்திருந்தார். கைதி மாயமாய் மறைந்துவிட்டான். போலீஸ் இன்ஸ்பெக்டர் முதலில் திடுக்கிட்டுப் போனார். சுந்தரம் கையமர்த்தி, அங்கு திருப்பள்ளி கொண்டிருந்தவரைத் தட்டி எழுப்பினார். அவர் ஏதோ பிதற்றலானார். பிறகு சுந்தரம் அவரைத் தட்டிக்கொடுத்து அவர் வரலாற்றை ஒளிக்காமல் சொல்லும்படி விசாரிக்க, அவர் பின்வருமாறு சொன்னார்:—"நான் சுதர்மன் என்னும் பேபருக்கு உப பத்திராசிரியராக இருந்தேன். மாஸம் சம்பளம் 30 ரூபாய். பிச்சைக்காரர்களின் ஸ்திதியைப்பற்றி பேபருக்கு எழுதவேண்டியிருந்தது. பிச்சைக்காரன் ஸ்திதியிலிருந்துபார்த்து எழுதவேண்டுமென்று தோன்றிற்று. உடனே அதற்கு வேண்டிய வேஷங்களை வாங்கி பிச்சைக்காரவேஷம் போட்டு உட்கார்ந்தேன். அன்று 14, 15 அணா வரும்படி வந்தது. பேபருக்கும் வியாஸம் எழுதினேன். இப்படி இருக்கையில் நான் 40-ரூபாய் கொடுக்கவேண்டிய ஒருவர் ரூபாயை ஒருமாஸ தவணைக்குள் கொடுக்க வேண்டுமென்றார். உடனே வேலையை ராஜினாமா கொடுத்துவிட்டு பிச்சைக்காரவேஷம் போட்டு உட்கார்ந்தேன். மாஸக்கடைசியில் எண்ணிப்பார்க்கையில் சுமார் ரூபாய் 50 வந்திருந்தது. எனது ஆச்சரியத்திற்கு அளவில்லை. பிச்சைக்காரத் தொழிலிலேயே புகுந்து விட்டேன். எனது துரதிர்ஷ்டம் என்மனைவி என்னைப்பார்த்துவிட்டாள். "பிச்சைக்காரன், இவன் தகப்பன்" என்று என் பிள்ளையை ஜனங்கள் இகழாதிருக்க வேண்டுமென்று வருகிறது வரட்டுமென்று போலீஸாரிடம் ஒன்றும் சொல்லாமல் இருந்துவிட்டேன். இப்பொழுது என் 'குட்டு' தெரிந்து போய்விட்டது. ஆனாலும், என் சமாசாரத்தைச் சொல்லி பஹிரங்கப்படுத்தாமல் என் மானத்தைக் காப்பாற்றவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்" என்றார். சுந்தரமும் அதற்கிணங்க வேண்டியதாயிருந்தது. போலீஸ் ரிபோர்ட்டுகளை யெழுதி முடித்து அதை "ரஹஸ்யமானது" என்று குறிப்பிட்டு மாஜிஸ்திரேட்டுக்கு அனுப்பினார்கள். இவரும் "இது ஆள் தடுமாட்டத்தினால் உண்டான் கேஸ்" என்று குறிப்பிட்டு கைதிகளை விட்டு விடும்படி உத்தரவு செய்தார். கடைசியில் செல்வகேசவராய முதலியாருக்கு பிச்சைக்காரன் உத்யோகம் போனதோடு எல்லாம் சரியாக முடிந்தது.

[இக்காலத்தில் பிச்சைக்காரர்கள் எல்லாம் அவ்வளவு சம்பாத்தியக்காரர்கள் என்று எண்ணிவிடவேண்டாம்.—ப-ர்.]

## SCINTILLATIONS FROM THE LIFE OF A KINDERGARTEN CHILD.
## MY SCHOOL AND SCHOOL EXPERIENCE.

"The whole duty of parent, teacher, preacher, author, orator, actor, is done, when they have caused their children to think. The whole duty of Man is done when he thinks. Thought does all the rest, when the dynamo is all ready and the wires all laid, the whole duty of the operator is done when he turns on the current and keeps every thing so that the current can have unobstructed flow. Since THOUGHT is POWER all one's duty is done when he turns on the Thought current. After that he has only "to trust the current that knows its way" as Emerson says........TO KNOW, HOW *to think and* WHAT *to think, is the sum total of Knowledge*: TO THINK what you choose *is the sum total of duty*. This is the Human side of Life. The rest is the Divine side, and that Divine side through Infinite power of thought, does the work"—Mr. Henry Harrison Brown.

'Whatsoever things are true, whatsoever things are honest, whatsoever things are pure, whatsoever things are lovely, whatsoever things are of good report, THINK ON THESE THINGS."—St. *Paul*.

## பாலபோதமுறையும் பள்ளிப்படிப்பும்.

நான் ஒரு சிறுமி. இங்குள்ள பெண்கள் பாடசாலையில் படித்து வருகிறேன். இதுவரையில் எங்களுக்கு கிழவர் பாடம் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தார். இப்பொழுது ஒரு வாத்தியாரம்மாள் வந்து பாடஞ்சொல்கிறார்கள். அந்தம்மாள் புதிசு. போகப்போகத்தான் அவாள் குணமும் திறமும தெரியவரணும். இதுவரையில் எங்கள் பள்ளிக்கூடம் கேட்பாரற்றுக்கிடந்தது. மாட்டைக்கொண்டுபோய் மந்தையிலடைத்துக் காலாற வீட்டுக் கோட்டிவந்துவிடுவதுபோல், "நாங்களும் பள்ளிக்குப்போகிறோம்" என்று பேருக்குப்போய்க்கொண்டு வந்தோம். இப்போது வீட்டுக்குவீடு சென்று பணம் சேர்த்து ஆராரோ பெரிய மனுஷாளெல்லாம் வந்து பள்ளிக்கூடத்தைச் சீர்ப்படுத்தப்பார்க்கிறார்கள். "கேள்விமுறை" யேற்பட்டிருக்கும் இக்காலத்திலாவது எனது குறையைச் சொல்லித் தீர்த்துக்கொள்ளலாமென்று என் சின்னப்புத்திக்குத் தோணினதை எங்கப்பாவிடம் சொன்னேன். அவர் "ஆண்டிசொல் அம்பலமேறாது" என்று சொல்லிவிட்டார். என்குறையை அடக்கியடக்கிப் பார்த்தும் அடங்குவதாகவில்லை. என் குறையை வெளியிட்டால்தான் தீருமென்று சொன்னேன். அப்படியானால் 'பேபருக்கு' எழுதுஎன்று சொன்னார். நான் சின்னஞ்சிறுமி; எனக்குவக்கணையாக எழுதத் தெரியாது. ஆகையால் நானும் என் தமக்கையுமாகச் சேர்ந்து இதை யெழுதி யுங்களுக்கு அனுப்புகிறோம். எங்கள் பெயரை வெளியிடாமல் என் குறைபைமட்டும் வெளியிடக்கேட்டுக் கொள்கிறேன். குற்றங்குறையைப் பொறுத்து திருத்தியச்சிடப் பிரார்த்திக்கிறேன்.

என்னுடைய முதல் குறையென்ன வென்றால்:—எங்கள் பள்ளிக்கூடத்திலே வாத்தியார் குழந்தைகளைக் குழந்தைகளென்று பாராமல் பிரம்பால், "சுள்ளு, சுள்ளு" என்று அடிக்கிறார். இரண்டு மாசத்துக்குமுன் என்னை வாத்தியார் பளீரென்று பிரம்பால் அடித்துவிட்டார். கை கொப்புளிச்சுப் போய்விட்டது. மத்தியானம் சாப்பிடப்போனபோது அந்தக்கையால் சாப்பிடமுடியவில்லை. என்ன செய்கிறது! அப்பாவோடு சொல்ல வெட்கமாயிருந்தது. கொப்புளிச்சுப் போயிருந்ததால் மருந்துபோடணுமோ என்னமோ வென்று அப்பாவிடம் சொன்னேன். அவர் ஈரத்துணியைச் சுற்றிவைத்து 'இதை அவிழ்க்காமல், இன்னொரு கையால் சாப்பிடு, வீக்கம் வடிந்துபோம்' என்று சொன்னார். சாப்பிட்டுவிட்டு வருகையிலே ஒரு கடிதத்தை யெழுதிக்கொடுத்து "இதைப் பெரிய வாத்தியாரிடம் கொண்டுபோய்க்கொடு" என்று அப்பா சொன்னார். அதில் என்ன எழுதியிருக்கிறீர்களென்று கேட்டேன். இதைக் கொடுத்தால் உபாத்தியாயர் இனி யாரையும் அடிக்கமாட்டார். உன்னை அடித்த வாத்தியாருக்கு அபராதம் விழும்; அல்லது இன்னும் பெரிய தண்டனை கிடைக்குமென்று சொன்னார். "குருத்துரோகம் மஹாபாவம்" என்று அம்மாள் சொல்லக் கேட்டது எனக்கு அப்போ ஞாபகம் வந்தது. வாத்தியாருக்குக்கெடுதல்செய்து விட்டோமேயென்று எனக்கு துக்கம் வந்தடைத்துக் கொண்டு விட்டது. அந்தக் காகிதத்தைக் கிழித்துவிடும்படி அப்பாவைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டழுதேன். அப்போ என் வலியெல்லாம் 'எங்கேயோ போய் விட்டது.' வாத்தியாரைக் காட்டிக்கொடுக்காமல் தப்பித்துக் கொண்டால் போதுமென்றாய்விட்டது. நல்லவேளையாக அப்

பாவும் என் வேண்டுகோளுக் கிணங்கினார். அது முதல் வாத்தியார் என்னை அடிப்பதில்லை. ஆனால் என்னைப்போலொத்த சிறுமிகளையும் என்னிலும் சிறு குழந்தைகளையும் வாத்தியார் சுள்ளு, சுள்ளென்று அடிக்கும்போது அந்த அடியெல்லாம் என்மேல் விழுகிறாப்போலிருக்கிறது. அப்பாவோடு சொன்னால் அநர்த்தம் விளையுமேயென்று பயமாயிருக்கிறது. சும்மாவிருப்போமென்றாலும் குழந்தைகளை யடிக்கிறபோது நான் படும் சங்கடம் எனக்குப் பெரிதாயிருக்கிறது. எனக்கே யப்படியிருக்கும்போது அடிபடுகிற குழந்தைகளுக்கு எப்படியிருக்குமோ! வெளியில் சொன்னால் வாத்தியாருக்கு அவதி! சும்மாவிருந்தால் சிறுகுழந்தைகளுக்கு அவதி! இந்த தர்ம சங்கடத்துக் கென்னசெய்கிறதென்று தெரியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தேன். என்னை யறியாமல் இதை யெழுதிவிட்டேன். எனக்கு தோஷம் நேரிடாமல் இதற்கு வழிபிறக்க வேண்டுமென்று ஸ்வாமியை வேண்டிக்கொண்டே யிருக்கிறேன். புருஷவாத்தியாரே யில்லாமல் எல்லாரும் பெண்வாத்தியார்களாக விருந்தால் இப்படி அடிபட வேண்டியிருக்காது என்று நினைக்கிறேன். அது எப்படியாமோ யார் கண்டார்கள்?

நான் பள்ளிக்கூடம் போனதுமுதல் துரைசானி வந்து பரீக்ஷிப்பதுண்டு. இப்போ புதிதாய் துரைசானி வந்து 'ப்ரைஸ்' கொடுக்கப்போகிறாளாம். பள்ளியில் தடபிடல் செய்கிறார்கள். 'ப்ரைஸ்' என்றால் என்னவென்று நான் அப்பாவைக் கேட்டேன். துரைசானி வந்து கெட்டிக்காரக்குட்டிகளுக்கு என்னென்னவோ 'வெகுமதி' கொடுப்பாளென்று சொன்னார். 'வெகுமதி' என்றால் கெட்டிக்காரியாயிருப்பதற்காக இனாம் கொடுக்கிறதாம். எல்லாம் சரிதான். எங்களில் கெட்டிக்காரி யாரென்று என்னமாய்க் கண்டுபிடிக்கிறது? நாளைக்கு துரைசானி வரப்போகிறாளென்று இரண்டு நாளாக தினம் பள்ளிக்கூடத்தில் குட்டிகளைப் பொறுக்கிப் பாட்டும் ஆட்டமும் சொல்லிக்கொடுத்துப் பழக்குகிறார்கள். துரைசானி வந்தால் எல்லாருக்கும் சொல்லிக்கொடுத்ததை யல்லவோ பரீக்ஷித்துப் பார்க்கவேண்டும்? சிலபேரைமட்டும் பொறுக்கி அவர்களுக்கு எல்லாம் சொல்லிக்கொடுத்து எங்களையெல்லாம் உம்மணாமூஞ்சிபோல் உட்கார்த்தி வைத்து வாயைத்திறக்கவிடாமல் கையைக்காலை யாட்டவிடாமல் "பேசாதே பேசாதே, விஷமம் பண்ணாதே!' என்று வாத்தியார் சட்டதிட்டம் பண்ணிக்கொண்டு நவராத்திரி பொம்மைகளைப்போல் உட்கார்ந்திருக்கப் பழக்கினால் இது சரியா? எல்லாருக்கும் வாசிக்கவேண்டுமென்றும், பாட்டுப்படிப்புச் சொல்லிக்கவேண்டுமென்றும் தான் ஆசையாயிருக்கு. எல்லாருக்கும் சமமாகச் சொல்லிக்கொடுத்தால் அப்போ சரித்தான். சிலருக்கு உயர்த்தியாகவும் சிலருக்குத் தாழ்ச்சியாகவும் சொல்லிக் கொடுத்தால் அது சரியா? இப்படி ஏற்றத்தாழ்ச்சி பாராட்டி எங்களைத் தான் சிறுகுட்டிகளென்று எச்சுப்போடப் பார்க்கிறார்கள். அப்படியே துரைசானியையும் ஏய்க்கப்பார்க்கிறார்களே. நாளைக்கு வரப்போகிற துரைசானிக்குக் கண்குருடா! இவர்கள் வேஷத்தைக் கண்டு பிடிக்க அவளுக்குத் தெரியாதா? நாலுகுட்டிகள் ஆடிப்பாடி அழகாய் நடித்தால் அவர்களுக்குப் பின்னால் நாற்பது குட்டிகள் மூஞ்சியிறங்கி யுட்கார்ந்திருக்கிற போது முகப் பார்வையினால் இவாளுடைய பள்ளிக்கூடத்தின் வள்ளல் வெளியாகி விடாதோ? துரைசானிகளெல்லாம் ரொம்ப கூர்புத்தியுள்ளவர்கள், நன்றாகப்படித்தவர்கள், உள்ளபடி யறியும் சக்தி அவர்களுக்கு அதிகம் என்று எங்கம்மாள் எனக்கு அடிக்கடிச் சொல்லியிருக்கிறாளே! நாங்கள், (சிறு குழந்தைகள்,) யாரையும் ஏமாற்றப் பார்க்கக் கூடாதென்றும், பொய்சொல்லக் கூடாதென்றும், ஒரவஞ்சனை செய்யக்கூடாதென்றும், நான் மழலைச்சொல் மாறாத குழந்தையாயிருந்ததுமுதல் என் தாயார் எனக்கு அடிக்கடி சொல்லி வந்திருக்கிறாள். ஆகையால் இப்படியெல்லாம் செய்கிறது பிசகு என்று எனக்கு நன்றாக மனதில் பட்டிருக்கிறது. ஆனால், பெரியவாளெல்லாம் நாங்கள் செய்யக்கூடாதென்று தடுக்கப்பட்ட காரியத்தை எங்கள் கண்முன்னேயே செய்கிறார்களே! அதுமட்டும் குற்றமில்லையோ வென்று எனக்குப் பட்டது. நாமும் பெரியவர்களாகப் போனால் இப்படி யெல்லாம் செய்யலாமோ வென்று நினைத்தேன். உடனே எங்காத்துக்கு எங்கம்மாளைப் பார்க்கவந்த இரண்டு துரைசானிகள் ஞாபகம் எனக்கு வந்தது. அவர்களில் ஒரு துரைசானி சீமையிலேயிருந்து பெண்கள் படிப்பதைப் பார்க்கவேண்டுமென்று தள்ளாத வயசிலே கப்பலேறி இங்கே வந்தவவளென்று அம்மாவும் அப்பாவும் அடிக்கடி சொல்லக்கேள்வி. இன்னொரு துரைசானி பெண்கள் பள்ளிக்கூடங்களை யெல்லாம் பரீக்ஷிப்ப

வர். இவாளிரண்டுபேரையும் எனக்கு நன்றாகத்தெரியும். பெரிய துரைசானியும், சின்ன துரைசானியும் அடிக்கடி கடிதமெழுதி யென்னைப்பற்றி விசாரிக்கிறதுண்டு. ஒருதரம் பெரிய துரைசானி இங்கேயகப்படாத மிகவும் அழகான 'வாடாத பூ' ஒன்று சீமையிலிருந்தனுப்பி அதை யெனக்குக் கொடுத்து, துரைசானி என்னை சமர்த்தாகவிருக்கச் சொன்னாளென்று சொல்லச்சொல்லி அப்பாவுக்கு எழுதியிருந்தது எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. அப்பா அந்தப் பூவைக்கொடுத்து துரைசானி "சமர்த்தாகவிருக்கச்சொன்னாள். பொய்சொல்லப்படாது என்று சொன்னாள். எல்லாருக்கும் நல்லவளாய், நல்ல மனசுள்ளவளா யிருக்க வேண்டுமென்று சொன்னாள்'—என்று படித்துப் படித்துச் சொன்னது எனக்கு நன்றாக ஞாபகத்திலிருக்கிறது. சின்னதுரைசானியும் அடிக்கடி எனக்கு புத்திசொல்லி யெழுதுவள். இப்படியெல்லாம் சொன்னது பொய்யா—எல்லாரும் நம்மை ஏமாற்றவா பார்த்தார்கள்? என்று நினைத்தபொழுது எனக்கு மனதில் சொல்லத்தெரியாத ஒருவித சங்கடமும் துக்கமுமுண்டாயிற்று. அப்பாவிடம் என்குறையை வெளியிட்டுச் சொன்னேன். அவர் அம்மாள் சொன்னதும் துரைசானிகள் சொன்னதும் தான் நிஜம் என்றும், அதற்குச்சரியாக நடந்து கொள்வது தான் நல்லது என்றும் சொன்னார். ஆனால் நான் பள்ளிக்கூடத்தில் பார்த்தது அதற்குச் சரியாகவில்லையே! அவ்வளவு பெரியவாளெல்லாம் தப்புச்செய்கிறார்ளே! இப்போநடக்கிற கெடுபிடியெல்லாம் நாளைக்குவருகிற துரைசானியை ஏமாற்றச் செய்வதாகத்தானே யிருக்கிறது! என்றேன். அப்பா அதற்கு ஒன்றும்சொல்லவில்லை. எனக்கென்னமோ பள்ளிக்கூடத்துக்குப் போவதுகூடப் பிடிக்காமலிருந்தது. அதையெல்லாம்பற்றிச்சொல்கிறது சரியாகவிராது. இப்படி பள்ளிக்கூடத்திற்துப் போய் மொந்தைபோல் ஊட்கார்ந்துவருவதைவிட, வீட்டிலிருந்து பாட்டும்படிப்பும் சொல்லிக்கலாமே யென்று எனக்குப் பட்டது. அகத்திலே அப்பா அடிக்கடி "எதையும் நன்றாகப்பார்! பார்த்துப்பார்த்து பார்த்ததையெல்லாம் அழிக்கடி நினைத்து யோஜிக்கக்கற்றுக்கொள்!" என்கிறார். எனக்கு அம்மாள் சொல்லி மனதிற்பட்டதையும் பள்ளிக்கூடத்தில் நான் பார்த்ததையும் யோஜித்துப்பார்க்க "பொய்சொல்லக்கூடாது" என்று சொல்வது மெய்யானாலும், "இந்தக்காலத்தில பொய்சொல்லாமல் ஆர் இருக்கிறார்கள்!" என்று அத்தையும் பாட்டியும் அடிக்கடி முணுமுணுத்துச்சொல்லிவந்தது சரிதானென்று நினைக்கும்படியாயிருந்தது. "பொய்சொல்லி வாழலாமா?" என்று முன் காலத்துப்பாட்டி சொல்லியிருக்க, "பொய்சொல்லாமல் வாழலாமா?" என்று இக்காலத்துப்பாட்டி சொல்கிறாளே. அம்மா அப்பா கேட்க அவள் அதைச்சொல்லப் பயந்துவந்ததால் அது சுத்தப்பொய் யென்றே யெண்ணியிருந்தேன். இப்போ பள்ளிக்குப்போய் வருவதில் நான் பார்த்தமட்டில் 'பொய்யும்புளுகும் வேண்டுந்தானோ'வென்று நினைக்கும்படியாயிற்று. இந்த எண்ணம் கொஞ்சகாலந்தான் என் மனதிலிருந்தது. ஏனென்றால் என் தாயார் "ஸத்யமேஜயம்" என்று அடிக்கடி சொல்லிவந்ததும் எங்கள் பாட்டி சொல்கிற பொய்யெல்லாம் வெளிப்பட்டு எங்கம்மாள் ஸத்யம் அவளைத்தலைகாத்ததும் எனக்கு நன்றாய் ஞாபகத்தில் வந்தது. வரவும், இந்தப்பொய் வேஷங்களையெல்லாம் வெளியில் காட்டிவிடவேண்டுமென்று எனக்குத்தோன்றிற்று. துரைசானிக்கே இதையெல்லாம் தெரியப்படுத்திவிடவேண்டுமென்று பார்த்தேன். வாத்தியார் அடிப்பாரேயென்று பயமாயிருந்தது. அப்பாவும் அது கூடாதகாரியமென்று சொன்னார். இரகசியமாகச்சொன்னால் "புறங்கூறல்" குற்றமாமென்றார். பகிரங்கமாக வெளியிட்டால் குற்றமில்லையாம். ஆனால் சின்னக்குட்டியாச்சே, தப்பில்லாமல் எழுதவராதேயென்றுபார்த்தேன். என் தமக்கையும் நானும் பேசிக்கொண்டிருக்கையில், நான் என் குறையையெல்லாம் சொன்னால் இருவருமாகச்சேர்ந்தெழுதலாம் என்றாள். நாங்களிருவருங்கூடி எவ்வளவோ யோசனைபண்ணி எத்தனையோதரம் எழுதிக்கலைத்து கடைசியில் அண்ணாபார்த்து இதைசரிப்படுத்தி யெழுதிக்கொடுத்தான். இவ்வளவுநன்றாகஎனக்கு எழுதவராதானதால் இதையெல்லாமகண்டெழுதினால்தான்என்பேரால் இதைபேபருக்கு அனுப்பலாமென்றேன். இதற்கு அண்ணாவும் அக்காவும் சரியென்று சம்மதித்தார்கள். நானும் இதன் கீழே எனக்கு அண்ணா கொடுத்த கள்ளப்பேரைகொண்டு கையெழுத்துப் போடச்சம்மதித்தேன்.

இப்படிக்கு,

உண்மையுள்ள உற்பாதபிண்டம்.

## "THE CHILDREN'S DAY" MOVEMENT AND ITS SEQUEL.

"The idea caught the imagination of the children and the public"—From "The Children's Day" Report.

(1) Mr. Devadhar one of the secretaries of the Bombay Committee explained the objects of the committee and further made it clear to the teachers how that day was a special opportunity afforded to them to impress upon the minds of their pupils the great lessons to be learnt from the lives of Lord and Lady Hardinge.

(2) Principal T. A. Savage "in his presedential address to the teachers struck the right note when he asked them to make the children feel that they were all the children of the common motherland."

(3) "I shall make use of the copies you have sent in bringing your movement to the notice of those in the country who are likely to sympathise with your efforts. Wishing you all success in this manifestation of your manysided activities."—D. Duncan, formerly Director of Public Instruction, Madras.

## THE "ALL-THE INDIA CHILDREN'S MEMORIAL."

ஹார்டிஞ்சு ஜயந்தியிலிருந்துண்டான பாலபோத ஸமஸ்டிசேவை ஸாதனசங்கம்.

ஆதரவு மொழிகள்.

சென்னையில் முன் வித்யாபிவிர்த்தியலாகாத் தலைவராயிருந்தவரும், ஹெர்பர்ட் ஸ்பென்ஸருடைய ஜீவ்யசரித்திராசிரியருமான டாக்டர் டேவிட் டங்கன், எம். ஏ., டி. எஸ் ஸி., அவர்கள் அபர்டீன் பட்டணத்திலிருந்து நவம்பர்மீ 26உயிட்டுப் பின்வருமாறு ஸ்ரீமத் சி. வி. ஸ்வாமிநாதய்யருக்கு எழுதியிருக்கிறார்:—"பாலபோத ஸமஷ்டி சேவை ஸாதனசங்கத்துக் குதவியாக ஸ்வல்பத்தொகை எனது கையொப்பமாக இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அந்தச் சங்கம் ஸாதனார்த்தமாக ஏற்பட்டது தங்கள் மனோபீஷ்டம்போல் முன்னுக்குவந்து பிரபலமடையுமென்று எண்ணுகிறேன். அது மிகவும் பிராபல்யமடையத்தக்கதென்றே சொல்லுவேன். உங்களுடைய நகரத்தார், தேசத்தார் பலரும் அதையங்கீகரித்து அனுதாபம் காட்டியிருக்கிறார்களென்று அனுப்பிய 'ஸர்க்குலர்' கடிதத்தால் தெரியவருகிறது. அவர்களுடைய ஆதரவு தொடுத்த காரியத்தைத் தெர்டுபிடியாய்த்தொட்டு நடத்த உமக்கு ஊக்கத்தையளிப்பதாகுக. நீர் அனுப்பிவைத்த கடிதங்களை இங்கே உங்களுடைய ஸாதனசங்க முயற்சியில் அனுதாபத்துடன் உழைக்கத்தக்கவர்களைப் பார்த்து அவர்களுக்குத் தெரிவிப்பதற்காக உபயோகப்படுத்துகிறேன். பலதுறையிலுமிறங்கிப் பெருமுயற்சி செய்துவரும் உங்கள் பிரயத்தனங்களெல்லாம் பலிப்பதாகவென்று கடவுளைப்பிரார்த்திக்கிறேன். இப்படிக்குத் தங்களிடத்து உள்ளன்புள்ள டி. டங்கன்."

லண்டன் டைம்ஸ் என்னும் உலகப்பிரஸித்திபெற்ற பத்திரிகையின் ஆசிரியரும் குழந்தைகள் விஷயத்தில் கனிவுகொண்டு நமது கடிதங்கள் வந்துசேர்ந்ததைப்பற்றி அன்புகூர்ந்து நவம்பர்மீ 24உ ஒரு கடிதமெழுதியிருக்கிறார்.

பம்பாயிலுள்ள குழந்தைகள் லார்ட் ஹார்டிஞ்சு ஜயந்தி கொண்டாடுவதற்காக ஏற்பட்ட கமிட்டியின் காரியதரிசியவர்கள் ஹார்டிஞ்சு ஜயந்திகொண்டாடிய வைபவத்தைக் குறிக்கும் ரிபோர்ட்டொன்று 'புருப்காபி' யாக அனுப்பியிருக்கிறார். அதில் அக்கமிட்டியின் காரியதரிசியாகிய மிஸ்டர் தேவதார் அவர்களும் இதர கனவான்களும் உபாத்தியாயர்களைக்கூட்டி அவர்களுக்கு ஹார்டிஞ்சு ஜயந்தி கொண்டாட வேண்டியவிதத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்துப் பேசியபொழுது, லார்ட் ஹார்டிஞ்சு பிறந்தநாளைக் குழந்தைகள் ஹார்டிஞ்சு ஜயந்தியாகக் கொண்டாடுவதின் உத்தேசம் இன்னதென்பதை எல்லா உபாத்தியாயர்களும் மனதில் வைக்கவேண்டுமென்றுசொல்லி ஸ்வபாஷைகளிற் பேசிப் பிரசங்கித்தார்கள். அதன் கருத்தெல்லாமென்னவெனில்:—குழந்தைகள் எல்லாரும் லார்ட் ஹார்டிஞ்சு, லேடிஹார்டிஞ்சு இவர்களுடைய ஜீவ்ய சரித்திரத்தின் உண்மையை உணர்ந்து அவர்களுடைய உத்தம சித்தத்தையும் உயர்குண விசேஷத்தையும் உள்ளபடியறிந்து அவர்களை யுதாரணமாகக்கொண்டொ

